

# அடி காட்டுக்கு நடு மாட்டுக்கு நுனி வீட்டுக்கு

கோ.நம்மாழ்வார்



# அடி காட்டுக்கு நடு மாட்டுக்கு நுனி வீட்டுக்கு

கோ.நம்மாழ்வார்

**காணிக்கை**

என் ஆசான் நம்மாழ்வாரின்
ஆரம்ப கால களப்பணிகளில்
உதவியாளர்களாக அமைந்த குமரவேல்
மற்றும் திரு.வி.க.ரமேஷ் ஆகியோருக்கு…

-நம்மாழ்வார்தாசன்

**இயற்கை வேளாண் விஞ்ஞானி**

கோ. நம்மாழ்வார்( *G. Nammalvar* , 6 ஏப்ரல் 1938 - 30 திசம்பர் 2013 ) தமிழ்நாட்டின் முதன்மை இயற்கை அறிவியலாளர்களில் முக்கியமானவர். இவர் தஞ்சாவூர் மாவட்டம் , திருக்காட்டுப்பள்ளிக்கு அருகேயுள்ள இளங்காடு என்னும் சிற்றூரில் பிறந்தார். இவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வேளாண்மை இளங்கலைப் படிப்பை படித்தார். பசுமைப் புரட்சி , தொழில்மயமாக்கம், சூழல் மாசடைதல் தொடர்பாக காரமான விமர்சனங்களையும் ஆக்கபூர்வமான மாற்றுகளையும் முன்வைத்தவர். தமிழ்நாட்டில் இயற்கை வழி வேளாண்மை முறைகளை ஊக்குவித்தவர். தமிழ்நாட்டில் மட்டுமல்ல இந்திய அளவில் இயற்கை வேளாண்மை இயக்கம் வேகம் எடுக்க பங்காற்றினார். நம்மாழ்வாரின் உரை, எழுத்துகள் மூலம் இயற்கை வேளாண்மைக்கு திரும்பிய விவசாயிகளின் எண்ணிக்கை ஏராளம், ஏராளம். வானகம், குடும்பம் அமைப்பு உட்பட பல அரசு சாரா அமைப்புகளின் அமைப்பாளராகவும் செயல்பட்டார்.

***உள்ளே...***

*நெஞ்சுக்கு நெருக்குமானவர்களே..!*

நுகர்வு வெறியாலும், எல்லாவற்றையும் தனதாக்கிக் கொள்ளும் பாழ்பட்ட எண்ணத்தாலும் அறவழி பாதையிலிருந்து விலகி பயணிக்கும் மனித இனம், மீண்டும் மாறுதல் கொள்ளும் காலம் வரும் என்று நான் நம்புகிறேன். உறுதியாக நம்புகிறேன். காலமும் அதனை நிரூபித்துள்ளது. கடந்த முப்பது ஆண்டுகளில் இயற்கை வழி வாழ்வியல் சார்ந்த புதிய முயற்சிகள் தற்காலத்தில் வேகம் கொண்டுள்ளது. நிறைய பெண்கள் வானகத்தில் நடைபெறும் பயிற்சி முகாமில் கலந்து கொள்வது அதற்குச் சான்று.

என்னுடைய 75 ஆவது பிறந்தநாள் விழாவில் இந்த நூலை எடுத்து வருவது மட்டற்ற மகிழ்வையும் நிறைவையும் வழங்குகிறது. ஈஷா காட்டுப்பூவில் வெளிவந்த இந்தக் கட்டுரைகளுக்கு நிறையத் தகவல்களைக் கொடுத்துதவிய சக தோழர்களுக்கும் நன்றி.

இந்த மண்ணை பசுமையாக்கும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபடும் தொண்டுள்ள நண்பர்கள் பசுமை தூய்மை இயக்கத்தினருக்கும் நன்றியும் வாழ்த்தும்.

உன்னை - ஓர் அணில் என்று கூப்பிட்டார்கள் காட்டிலிருந்து வந்த ஒன்று: அதே போல் உண்மையாய் நீ இரு எப்போதும் என் அன்புக் குழந்தையே.

உடலாலும் மனதாலும் துன்பத்தால் அவதியுறும் அனைவரும் வேதனையிலிருந்து விடுதலை பெறட்டும். பயப்படும் அனைவரும் தைரியம் அடையட்டும். கட்டுப்பட்ட அனைவரும் தளையிலிருந்து விடுபடட்டும், சக்தியில்லாதவர் சக்தி பெறட்டும். மக்கள் அனைவரும் வாழ்வோடு நட்பு பாராட்டட்டும், தங்களை இழந்துவிட்ட அனைத்து உயிர்களும், இளையவர். முதியவர். பாதுகாப்பு இன்றி இருக்கும் அனைவரும் கருணையுள்ள வேர்களால் காக்கப்படட்டும்.

-புத்தரின் பிரார்த்தனையிலிருந்து.

கோ. நம்மாழ்வார்
வானகம்.



## மரம் வளர்ப்பதை விடவும் மார்க்கம் வேறு இல்லை!

1992ஆம் ஆண்டு ரியோ டி ஜெனீரோ என்னும் இடத்தில் நடைபெற்றது 'பூமியைக் காப்போம்' மாநாடு. உலகம் வெப்பக் கூடாரம் ஆவது குறித்து பதட்டங்கள் பரிமாறப்பட்டன. சுற்றுச்சூழலை அதிகம் கெடுத்த நாடுகள், வானில் புகை கக்குவதைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று வேண்டுகோள் வைக்கப்பட்டது.

நிலக்கரியையும் பெட்ரோலையும் எரிப்பதால் கரி வெளியேற்றப் படுகிறது. ஆலைகள் புகை கக்குகின்றன. இந்தப் புகை, நீராவியோடும் அமிலத்தோடும் கலந்து பசையாகி, பூமியின் மேலே 15, 20 கி.மீ தூரத்தில் கரி வளையமாகி பூமியை வெப்பக்கூடாரமாக ஆக்குகிறது. இதனால் பனிமலைகள் உருகிக் கடலை நோக்கி ஓடி வருகின்றன.

பணக்கார நாடுகள் புகையைக் கக்கினாலும் அதன் பாதிப்புகள் ஆசியா கண்டத்தையும், குறிப்பாக இந்தியாவையும்தான் பெரிய அளவு தாக்குமாம். இன்றைய போக்கு நீடிக்குமானால், இந்த நூற்றாண்டு முடியும்போது அண்டவெளியின் வெப்பம் 3-5 டிகிரி அதிகரிக்கும் என்கிறது ஐ.நா. அறிக்கை .

விண்வெளி வெப்பம் அதிகரிப்பதன் விளைவு என்னவாகும் என்றும் அறிக்கை சொல்கிறது. கடல் நீர்மட்டம் உயர்ந்து கடலோரப் பகுதிகள் முழுகிப்போகும் அபாயம். தாறுமாறாகப் பருவங்கள் மாறும். தண்ணீர்த் தட்டுப்பாடு வரும். பயிர் விளைச்சல் குறையும். பஞ்சம் வரும், தொற்று நோய்கள் பரவும். இதைவிட வேறென்ன கொடுமை இருக்க முடியும்?

இது இப்படி இருக்க, இந்தியாவின் நிலை என்ன? எவ்வளவுதான் மாற்று ஏற்பாடுகள் செய்தாலும், 2031-32ஆம் ஆண்டில் மின் உற்பத்தி 425 நிலக்கரியை எரிப்பதால் உற்பத்தியாகும். இன்றைய நிலவரப்படி,

ஆண்டுக்கு 100 கோடி டன் நிலக்கரி எரிக்கப்படுகிறது. இது 410 கோடி முதல் 590 கோடியாக உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கரியை உள்வாங்குவது மரங்கள்தானே! மரங்கள் என்ன செய்யும்? மரம், மழையைக் கொண்டு வரும். நிழல் தரும், கனி தரும், வெள்ளத்தைத் தடுக்கும், கரியை உட்கொண்டு காற்றைச் சுத்தப்படுத்தும், மண்ணைப் பிடித்துக் கொள்ளும் இதையெல்லாம் நாம் அறிவோம். இதற்கு மேலும் அறிய வேண்டியவை உண்டு.

மரங்கள் இல்லாத மண்ணில் கனமழை தாக்கும்போது, ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் உள்ள 32 டன் மேல் மண்ணை எடுத்துச் செல்கிறது. மிகக் கனத்த மழை பெய்தாலோ, 400 டன் மண் பெயர்த்து எடுத்துச் செல்லப்படுகிறது. வண்டல், கடல் போய்ச் சேருகிறது அல்லது நீர்த் தேக்கங்கள் மேடுபடுகின்றன. இதனால் நாளடைவில் ஆறு வறண்டு போகும். மரக்குடை இருந்தால் அது மழை வேகத்தைக் குறைத்து மண் அரிப்பைச் சொற்பமாக்கிவிடுகிறது.

லேசான மழை பெய்யும் போது, மரங்களைத் தாண்டி மழை நீர் மண்ணைத் தொடுவது இல்லை. இலை, மரப்பட்டைகளில் மழை நீர் தேங்கி நின்று செல்களால் உறிஞ்சப்படுகிறது. எஞ்சியது ஆவியாகிறது. கன மழைக் காலத்தில் இலைகளில் பிடித்து வைத்தது போக, எஞ்சியவை தரையை எட்டுகின்றன. இந்நீரில் மரத்தின்

செல்களும் சேர்ந்து வரும். அவை மரங்களை ஊடுருவும், மழை நீர் பொட்டாசியம், கால்சியம், மெக்னீசியம், நைட்ரஜன், பாஸ்பரஸ் அனைத்தையும் கொண்டு வருகிறது.

இலைகளில் சேகரிக்கப்படும் மழை நீரில் சூரிய வெப்பத்தால் ஆவியாகிறது.  மரங்களின் வேர்வையாக வெளியேறி மேகத்தைக் குளிர்விக்கிறது. இவ்வாறு கருக்கொண்ட மேகம் குளிர்ச்சியான இடம் வந்தபோது, மழையாகப் பொழிகிறது.

கடலில் இருந்து ஆவியாகும் நீர், இரவில் குளிர்கிறது. மரத்தின் இலைகளில் படிகிறது. இவ்வாறு படிந்த நீரில் 15% சூரியனால் ஈர்க்கப்படுகிறது. 50% வேர்வையாக வெளியேறுகிறது. மீதமுள்ள நீர் நிலத்தடி நீராகச் சேமிக்கப்பட்டு அருவிக்கு நீர் தருகிறது. மழையை விடவும் இலைகள் அருவிக்கு நிறையவே நீர் தருகிறது. இப்போது நமக்குப் புரிகிறது. ஆபத்தைக் குறைத்துக் கொள்வதற்கு மரம் வளர்ப்பதை விடவும் மார்க்கம் வேறு இல்லை!

…………………

# இரண்டு நெருக்கடி !

மனித உறவுகளின் வெளிப்பாடு, சமூக வாழ்க்கை, சமூக வாழ்க்கையின் அடிப்படை அன்பு. மனித உயிர்களுக்கு அப்பாற்பட்டு அனைத்து உயிர்களுடனும் பின்னிப் பிணைந்தது நமது வாழ்க்கை. அன்பே அந்தப் பிணைப்புக்கான கயிறு. இந்த அன்பு எண்ணும் ஆறு வற்றிப்போகாமல் இருக்க, மனித சமூகம் முயற்சி செய்ய வேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

இயற்கை பற்றிய புரிதலற்ற போக்கு இரண்டு வகையான நெருக்கடியைத் தோற்றுவிக்கிறது. இயற்கை மீது மனிதன் தொடுத்த தவறான தாக்குதலின் விளைவாக, இயற்கை திருப்பித் தாக்கத் தொடங்கிவிட்டது. இது

ஒருபுறம், மறுபுறம் உலகெங்கும் உணவுத் தட்டுப்பாடு அச்சுறுத்துகிறது. உணவில் போதிய சத்து இல்லாமையால், ஒவ்வொரு நாளும் 18,000 குழந்தைகள் மடிகின்றன. இந்தத் தகவலைத் தருவது ஐக்கிய நாடுகள் சபை அறிக்கை . ஜூன் மாதம் 3, 4, 5 தேதிகளில் ரோம் நகரத்தில் உணவு உழவுத் துறை மாநாடு நடந்தது. அந்த மாநாட்டில் 193 நாட்டுத் தலைவர்கள் கலந்து கொண்டார்கள்.

அதில் பேசிய ஐ.நா.வின் உணவு உழவு அமைப்பின் பொதுச் செயலாளர் கூறிய தகவல்கள் அதிர்ச்சி தரத்தக்கவை. இன்று உலகில் பசிப் பிணியால் வாடுபவர்களின் எண்ணிக்கை 85 கோடி. இந்த எண்ணிக்கை குறுகிய காலத்துக்குள் 100 கோடியாக மாறும். இன்று 300 கோடி மக்கள் உணவுக்கு உத்திரவாதம் இல்லாமல் இருக்கிறார்கள். ஆப்பிரிக்க நாடுகளில் மழை இல்லை. விளைச்சல் இல்லை. எத்தியோப்பிய நாட்டில் 1984 ஆம் ஆண்டுப் பஞ்சத்தில் பத்து லட்சம் மக்கள் மடிந்து போனார்கள். இன்றும் கூட அது போன்று நடக்கலாம். இந்தத் தகவலை வெளியிட்ட அவர், உடனடியாக உணவு உற்பத்தியைப் பெருக்கும்படி பல நாட்டுத் தலைவர்களைக் கேட்டுக்கொண்டார். பட்டினி கிடப்போருக்கு உணவு வழங்கத் தயங்காதீர்கள் என்று வேண்டுகோள் விடுத்த பொதுச் செயலாளர், "நீண்ட காலத் தேவையை மறந்து விடாதீர்கள். 2030ஆம் ஆண்டில் இன்று உற்பத்தி செய்வது போதாது மேலும் 50% உணவு கூடுதலாகத் தேவைப்படும்" என்றும் சொல்லி வைத்தார்.

இன்றைய உணவுப் பற்றாக்குறைக்கு இரண்டு பெரும் காரணங்களை ஐ.நா. அறிக்கை முன்வைக்கிறது. உணவுப் பயிர் விளைந்த நிலங்கள். வாணிபப் பயிர்களுக்கு மாற்றப்படுகின்றன. இரண்டாவதாக உணவு விளைந்த நிலங்கள் உழவு அல்லாத பயன்பாட்டுக்கு (வீடு, சாலை. தொழிற்சாலை) மாற்றப்படுகின்றன. பசியில் வாடும் மக்கள் எலும்பும், தோலுமாக நடமாடும் போது, ஊளைச் சதை வளர்ப்பதற்கு இரண்டாயிரம் கோடி டாலர்

செலவிடுவது நியாயமா? ஊளைச் சதை வளர்வதால் மனிதர்கள் குறைந்த வயதில் இறக்கிறார்கள். இதனால் மறைமுகமாக மேலும் பத்தாயிரம் டாலர் இழப்பு நேர்கிறது.

இந்த நேரத்தில்தான் கச்சா எண்ணெய் விலை உயர்வு உலகம் முழுதும் உள்ளோரின் வாழ்க்கையைப் பாதித்தது. மெழுகுவர்த்தி ஏந்தி மேற்கு நாடுகளில் போராடினார்கள். திருச்சியில் கண்டனப் பேரணியின் முன்பாக மாடு பூட்டிய வண்டி போனது. முன்பு, கலப்பையை மாடு இழுத்தது. வண்டியில் மாடு பூட்டப் பட்டிருந்தது. மாடுகளை இறைச்சிக் கடைக்கு அனுப்பி வைத்துவிட்டு லாரியும், ரயில் வண்டியும் விட்டார்கள். காசு கரைந்தது. காடு மறைந்தது. வானம் கரியானது. இப்போது கச்சா எண்ணெய் விலை நாட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பின்னுக்குத் தள்ளுகிறது.

பனி உருகுவதால், இமயமலை கரைகிறது. இமயமலையில் 15 ஆயிரம் பகுதிகளில் பனிக்கட்டிகள் அடர்ந்து, கோடைப் பருவத்தில் இந்தப் பனி உருகுவதால் வட இந்திய நதிகளுக்கு வற்றாது தண்ணீர் வந்து கொண்டு இருந்தது. பூமியில் வெப்பம் உயர்வதால் 2030-ம் ஆண்டுக்குள் 80% பனி உருகிவிடும் என்றும், வட இந்திய நதிகள் வற்றி, இந்தியாவைப் பஞ்சம் ஆட்டுவிக்கும் என்றும் அமெரிக்க, சீன, சுவிட்சர்லாந்து விஞ்ஞானிகள் எச்சரிக்கை விடுத்துள்ளார்கள். ஒருபுறம் உணவு நெருக்கடி, மறுபுறம் இயற்கை தரும் நெருக்கடி இரண்டு சிக்கலுக்கும் அடிப்படை ஒன்றே! பூமித்தாய் மீதான அன்பு என்னும் நதி வற்றிப் போனது. அன்பில்லா வாழ்க்கை, எலும்பு தோல் போர்த்த உடம்பு என்கிறது குறள்!

………………..

# நுண்ணுயிர் காப்போம்

எல்லோருக்கும் இரண்டு தாய்கள்! தாயும் தந்தையும் ஒருவர்தானே. இன்னொருவர் விவசாயி. அவர்கள் உடலைத் தந்தார்கள். இவர்கள் உணவைத் தந்தார்கள். உணவு இல்லாத உயிர்களின் வலியை நாம் அறிவோம். நமக்கு உணவு கொடுக்கும் விவசாயியின் வலியை யார் அறிவார்?

இயற்கையைப் படித்தவர்கள்தான் இந்தப் பிரபஞ்சத்தை உணர்ந்தவர்கள். இயற்கையை எப்போதும் விவசாயிகள்தான் படிப்பார்கள். மற்றவர்கள் ரசிப்பார்கள்.

விவசாயம் என்பது தொழில் அல்ல, நிலம் என்பது தொழிற்சாலையும் அல்ல. தாய் தன் பிள்ளைக்கு உணவூட்டுவது எப்படி ஒரு தொழிலாக முடியும்!

பல்லாண்டுகளாக நமது முன்னோர்கள் மண்ணில் வாழும் உயிர்களுக்கு உணவளிப்பதையே கடமையாகக் கொண்டிருந்தார்கள். ஆடு, மாடுகளைக் கொண்டு நிலத்தில் கிடை போட்டபோது மண்ணில் உயிர்கள் செழித்து வளர்ந்தன.

சிலர் கால்நடை எருவை நிலத்தில் பரப்பி உழவு செய்தார்கள். சிலர் தழை எரு தரும் செடிகளை வளர்த்து மடக்கி உழுதார்கள். சிலர் இலை தழைகளை வெட்டிக் கொண்டு வந்து சேற்றில் போட்டு மிதித்தார்கள். சிலர் கதிரை மட்டும் அறுவடை செய்து கொண்டு, கீழ் உள்ள வைக்கோலை நிலத்திலேயே மடியவிட்டார்கள். இவை அனைத்தும் மண்ணில் வாழும் உயிர்களுக்கு உணவாகின.

ஒருவகையில் பார்த்தால் 'மண்வளம்' என்பதே மண் உயிர்களின் பெருக்கம்தான். நிலம் வளமானால் ஒரு தேக்கரண்டி மண்ணில் கோடி நுண்ணுயிர்கள் இருக்கும் என்று விஞ்ஞானிகள் கணிக்கிறார்கள் இந்த நுண்ணுயிர்களின் செயல்பாடுகளால் மண்ணிலும், தண்ணீரிலும் காற்றிலும் உள்ள தனிமங்கள் செடிக்குக் கிடைக்கின்றன. இந்தக் தனிமங்களைக் கொண்டு பச்சை இலைகள் சூரிய சக்தியைச் சர்க்கரை சக்தியாக மாற்றுகின்றன.

சூரிய சக்தி நம் தலையைத் தொடும் போது மண்டை வெடித்துவிடும் போல இருக்கிறது. அதுவே பச்சை இலைமேல் படும்போது, சூரிய சக்தி சர்க்கரையாக மாற்றப்படுகிறது. அதாவது பச்சை இலையில் சமையல் நடக்கிறது. இந்தச் சமையலுக்கு மளிகைச் சாமான்கள் வழங்குவது நுண்ணுயிர்கள். இவற்றை பேக்டீரியா, காளான், பூஞ்சை என்று பல பெயர்களால் அழைக்கிறோம். நுண்ணுயிர்கள் பயிர் வளர்ச்சிக்குத்தான் உதவுகின்றன. இறந்தவர் உடல் இயற்கை எய்தவும் துணை செய்கின்றன. பால் தயிராகவும், சோற்றில் ஊற்றிய நீர் நீராகாரமாகவும், தோசை மாவு புளிக்கவும் கூட உதவுகின்றன.

இந்தச் சின்னஞ்சிறிய உயிர்கள் செய்யும் வேலைகளை விஞ்ஞான மனிதன் செய்ய முயன்று தோற்றுப்போனான். இது எப்படி நடக்கிறது என்று பார்ப்போம்.

பச்சை இலை உணவு சமைக்கிறது என்று பார்த்தோம். இலைக்குப் பச்சையைக் கொடுத்தது யார்? இலைக்குப் பச்சையைக் கொடுப்பது நைட்ரஜன். இந்த நைட்ரஜன் காற்று வெளியில் மண்டிக்கிடக்கிறது. அதாவது, காற்று வெளியில் 78% நைட்ரஜன்தான். இந்த நைட்ரஜனைக் காற்றில் இருந்து பிரிப்பது லேசான காரியம் அல்ல. இந்த அரும் பெரும் செயலை நுண்ணுயிர்கள் செய்கின்றன.

செடிக்கு நைட்ரஜன் வழங்கும் நுண்ணுயிர்களுள் நீலப் பச்சைப்பாசி, ரைசோபியம், அசோஸ்பைரில்லம், அசட்டோ பேக்டர் என்பவை மனிதன் அறிந்த சிலவாகும். இவற்றில் ஒரு வகை உண்டு. பாசிப்பயறு, உளுந்து, கொள்ளு, தட்டை, அவரை, மொச்சை, நிலக்கடலை போன்ற பருப்பு வகைச் செடிகளின் வேர்களில் தங்குபவை. இரண்டாம் வகை நெல், சோளம், கம்பு போன்ற செடிகளுக்கு அருகில் இருந்து நைட்ரஜன் வழங்குபவை. இந்த உயிர்களால் பிற உயிர்களுக்கு அழிவில்லை , சூழல் பாதிக்கப்படவும் இல்லை .

இதே வேலையைச் செய்வதற்காக மனிதன் யூரியாவைக் தயாரித்தான். காற்றில் உள்ள நைட்ரஜனைத்தான் பயன்படுத்தினான்.

இதற்காக ஆயிரம் மீட்டர் ஆழமான பெட்ரோலியக் கிணற்றில் இருந்து எடுக்கப்பட்ட நாப்தா என்ற பொருளைப் பயன்படுத்தினான். மாபெரும் ஆலையை எழுப்பினான். ஆயிரம் அடி ஆழத்திலிருந்து நீரை உறிஞ்சினான். சுற்றிலும் உள்ளவர்களுக்கு குடிதண்ணீர் பற்றாக்குறை வந்தது. பயன்படுத்தப்பட்ட நீர் சாக்கடையானது. அதை ஆற்று நீரிலும் கடல் நீரிலும் கலந்தான். மீன்கள் செத்தன. அமோனியா காற்று கசிந்து அண்டவெளி மாசுபட்டது.

யூரியாவை நிலத்தில் இட்டபோது, மண்ணில் இருந்த உயிர்கள் மடிந்தன. மனிதன் மேலும் மேலும் யூரியா போட்ட போது, பயிர் விளைச்சலும் சரிந்தது. மண் உவர்மண் ஆனது.

இனியேனும் மனிதன் எல்லாவற்றிலும் உயர்ந்தவன் என்று அகந்தை கொள்ளாமல் இருப்பது நல்லது. மண்ணுயிர்கள் அண்டி வாழும் உரச் செடிகளை மரம் நடுவோர் மனதில் நிறுத்துவோம். அவை அகத்தி, செம்பை, அவுரி, கொழுஞ்சி, சணப்பை, தக்கைப்பூண்டு, நரிப்பயர், நரிமிரட்டி, வேலி மசால், முயல் மசால், சங்குப்பூ போன்றவையாகும். மண்வளம் காக்க நுண்ணுயிர் காப்போம் இனியேனும்!

…………

## பெரும் விருது!

கடந்த ஜூலை 29-ஆம் தேதி திண்டுக்கல் நகரில் இருந்தேன் தூயமேரி உயர்நிலைப் பள்ளியில் ஆயிரக்கணக்கில் கூடியிருந்தார்கள் மாணவ, மாணவியர். அந்தக் கருத்தரங்கில் பேசும் போது பூமித்தாய்க்குக் காய்ச்சல் அதிகரித்து வருவதை முக்கியமாகக் குறிப்பிட்டேன், இரண்டு துருவங்களிலும் கிரீன்லாந்திலும் உள்ள பனிப்பாறைகள் உருகி ஆறாக ஓடிக் கடலில் கலக்கின்றன. அதனால் கடல் மட்டம் உயர்கிறது. கடலோர ஊர்கள் மூழ்கிப்போகும் ஆபத்து உள்ளது. காவிரிக்கும் கங்கைக்கும் வேறுபாடு உண்டு.

மேற்கு மலைத் தொடரில் மழை பெய்வதால் காவிரியில் மழை நீர் ஓடிவருகிறது. இமயமலையில் பனிப் பாளங்கள் உருகுவது அதிகமாகிறது. அதனால் வரும் ஆண்டுகளில் வெள்ளமும் அதற்குப் பிறகான வருடங்களில் வறட்சியும் ஏற்படும் ஆபத்து உள்ளது. இதனால் பயிர்த் தொழில் பாதிக்கப்பட்டு உணவுப் பஞ்சம் வரும் ஆபத்து உள்ளது' என்பதே என் பேச்சின் முக்கிய சாராம்சம். பேச்சு முடிவில் மாணவர்கள் கேள்வி கேட்க வாய்ப்பளிக்கப்பட்டது

ஒரு மாணவி இந்தக் கேள்வியை எழுப்பினாள். "பசுமை இல்லக் காற்றுகளே பூமி சூடாகக் காரணம் என்று சொன்னீர்கள், பசுமை இல்ல. காற்றுகளைக் குறைப்பதற்கு நாம் என்ன செய்ய முடியும்?" என்றாள் அதற்கு என் பதில் இதுதான். "பசுமை இல்லக் காற்றுகளான கார்பன்டை ஆக்ஸைடு, மீதேன், நைட்ரஸ் ஆக்சைடு, குளோரோ, ஃப்ளோரே கார்பன் இவை வெளியேற நமது பல நடவடிக்கைகள் காரணமாகின்றன. இவற்றை இரண்டு பெரிய இனமாகப் பிரிக்கலாம். ஒன்று. பெருகிவரும் தொழிற்சாலைகள் கக்கும் புகை, மற்றொன்று, பெருக வரும் வாகனங்கள் கக்கும் புகை. இரண்டுமே நாகரிக வளர்ச்சியின் சின்னமாகப் பார்க்கப்படுகிறது. அப்படியானால் நமது நாகரிக வளர்ச்சியைக் குறைத்துக்கொண்டால் பூமி சூடாவதைக் குறைக்கலாம். நாம் பேருந்து, மகிழ்வுந்து, இருசக்கர மோட்டார் பொருத்திய வாகனம் என பல வாகனங்களில் பயணிக்கிறோம். 60 பேர் 60 வாகனங்களில் செல்வதற்கு மாற்றாக அனைவரும் ஒரு பேருந்தில் பயணம் செய்வதால் கூடுதலாக 50 வாகனங்கள் புகை கக்குவதைத் தடுக்கமுடியும்."

கருத்தரங்கம் முடிந்து ஊர் திரும்பும்போது அந்த மாணவியின் கேள்வி மீண்டும் மீண்டும் மனதில் அதிர்வுகளை எழுப்பியது. பூமியைச் சூடாக்கும் பசுமை இல்லக் காற்றுகளைக் குறைக்க நாம் இன்னும் என்னவெல்லாம் செய்ய முடியும்?

அருள்தந்தை ஜான் கென்னடி அவர்களின், “பஞ்சபூத பாதுகாப்பு" என்ற நூல் நாம் செய்யக் கூடிய

வழிமுறைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது. மக்களின் வாழ்க்கை முறையும் சுற்றுச்சூழல் பாதுகாப்பும் ஒன்றையொன்று பிண்ணிப்பிணைந்தவை. ஒவ்வொரு மனிதரும் நம் வாழ்க்கை முறை எவ்வாறு சூழலை அழிக்கிறது என உணர்ந்து நடைமுறையை மாற்றிக்கொண்டாலே போதும். இதோ அந்தப் பட்டியல் ...

செய்தித்தாள் ஒன்றை, 9 முறை மறுசுழற்சி செய்ய முடியும். எனவே படித்துவிட்டுக் கீழே வீச வேண்டாம். 1 மீட்டர் உயரத்துக்கு அடுக்கப் பட்டுள்ள செய்தித்தாள்களை மறு சுழற்சி செய்வதன் மூலம் 7 மீட்டர் உயரமுள்ள மரம் வெட்டப்படுவதைத் தவிர்க்கலாம்.

தேவைகளைக் குறைத்துக்கொள்வது அவசியம். எளிமையான வாழ்க்கை, சூழல் காப்பதற்குத் துணைபோகும். பணியிடங்களுக்கு நடந்தே செல்வது, தூரம் கொஞ்சம் அதிகமானால் மிதிவண்டியில் செல்வது செலவைக் குறைக்கும், உடலுக்கு நலம்.

மறுசுழற்சி, மறு பயன்பாடு, மறு நிறைப்பு என்ற மனப்போக்கை வளர்த்துக்கொள்வது அவசியம். காடுகளை அழிப்பதில் பேப்பர்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. ஆகவே, பேப்பர்களைப் பயன்படுத்தும் போது நிதானமாகச் செயல்படுவது நல்லது. தட்டச்சு செய்யும் போது இரண்டு பக்கங்களிலும் செய்யலாம். எழுதும்போதும் அதிகம் இடைவெளி விடாமல் எழுதலாம்.

இன்று எளிதாகக் கிடைக்கக்கூடிய உலோகம் அலுமினியம். சிகரெட் பாக்கெட்டில் இருக்கும் அலுமினியத் தாள்கள், பாட்டில் மூடிகள், மாத்திரைகள் இருக்கும் அலுமினிய அட்டைகள், பழைய பாத்திரங்கள் ஆகியவை மீண்டும் பயன்படும் புதிய பொருட்களாக மாற்றப்படலாம். இவற்றை சேமித்து வைத்து. சேகரிப்பவர்களிடம் கொடுக்கலாம்.

புகைபிடித்தலைக் குறைக்கலாம். தவிர்க்கலாம். அது புகைப்பவரின் உடல்நலத்திற்கு மட்டுமல்லாமல் உடனிருப்பவருக்கும் தீங்கானது. ஆண்டுதோறும்

அமெரிக்காவில் புகை பிடிக்காத 4,000 பேர் புற்றுநோய் வந்து இறக்கிறார்கள் என்பதே இதற்கு சாட்சி.

கண்ணாடி மண்ணோடு மக்க குறைந்தது 100 ஆண்டுகள் ஆகும், எனவே, கண்ணாடியை மறு பயன்பாட்டுக்கும் சுழற்சிக்கும் அனுப்ப வேண்டும்.

நெகிழி (பிளாஸ்டிக்) என்பது மண்ணில் மக்கக்கூடியதே அல்ல. பிளாஸ்டிக்கால் ஆன பொருளைக் கீழே வீசாமல் மறு பயன்பாட்டுக்கும் மறு சுழற்சிக்கும் அனுப்பலாம்.

பொருட்களை வாங்கக் கடைக்குச் செல்லும்போது, வீட்டில் இருந்தே பை எடுத்துச் செல்லலாம். கண்மாய்க் கரம்பை, தழை எரு, கால்நடை எரு, பசுந்தாள் எரு, உர உயிரிகள், வளர்ச்சி ஊக்கிகள் போன்றவற்றைப் பயன்படுத்திப் பயிர் சாகுபடி செய்ய வேண்டும். இதன் மூலம் ரசாயன உரம் இடுவதால் வெளிப்படும் நைட்ரஸ் காற்றைத் தவிர்க்கலாம்.

பார்த்தீர்களா, இயற்கை அன்னையின் வளமும் மனித இனத்தின் நலமும் நம் ஒவ்வொருவரின் கைகளிலும் உள்ளது. நம்முடைய நடத்தையே மற்றவர்க்கு விழிப்பு உணர்ச்சியை ஊட்டக்கூடும். தனிமனிதரைப் போலவே நிறுவனங்கள் செய்யக்கூடியவையும் உண்டு. அரசாங்கம் செய்ய வேண்டியதும் உண்டு. அனைத்திலும் முக்கியமானவை இரண்டு. ஒன்று, காடு அழிக்கப்படுவது தடுத்து நிறுத்தப்பட வேண்டும். மற்றொன்று காடுகள் உருவாக்கப்பட வேண்டும்.

காடுகள் பசுமை இல்லக் காற்றுகளை உறிஞ்சிக் காற்றைத் தூய்மையாக்குகின்றன. எல்லோருக்கும் முன்னோடியாக, காடு வளர்ப்பு இயக்கத்தில் ஈடுபட்ட ஒரு யோகி உண்டு, அவர், சுந்தர்லால் பகுகுணா. காடுகள்தான் நமது கலாச்சாரத்தை, நாகரிகத்தை வளர்த்த புண்ணியத்தலங்கள். அவற்றை அழிப்பது நம்மை நாமே அழித்துக் கொள்வதில் முடியும் என்று சொன்னார் அவர்.

1981-ஆம் ஆண்டு இந்திய அரசு சுந்தர்லாலுக்கு பத்மஸ்ரீ விருது கொடுக்க முன்வந்தது. ஆனால் அதை ஏற்க அவர் மறுத்தார். "இமாலயப்பகுதிகளில் தினம் தினம்

ஏராளமான மரங்கள் அழிக்கப்படுகின்றன. காடுகள் அழிக்கப்படுமானால் மண் அரிப்பு ஏற்படுகிறது. பாரத மாதாவின் ரத்தமும் சதையுமாக நினைக்கிறோமே... அந்த வளமான மண், கடலை நோக்கித் தினமும் போய்க்கொண்டு இருக்கிறது. அது என்று தடுக்கப்படுகிறதோ, அன்றுதான் விருது பெறுவதற்கு உரிய தகுதி எனக்கு வரும்" என்றார் பகுகுணா.

மண்ணைக் காப்பது நம் ஒவ்வொருவரின் கடமை. அதுவே இயற்கைத் தாய்க்கு நாம் அளிக்கும் பெரும் விருது!

…………

**காகம் பறக்காத கண்மாய்!**

அமெரிக்காவில் ஒரு சூறாவளிப்புயல் வீசியது. மோட்டர் வாகனங்கள் வானில் பறந்தன. அடுத்த நாள் தொலைக்காட்சிய தகவல் வந்தது. இருவர் மட்டுமே பாதிக்கப்பட்டார்கள். வளர் நாட்டவர்கள் பேரிடர் வரும்போது அதனை எதிர்கொள்ளத் தய நிலையில் உள்ளார்கள். நாமோ எல்லையற்ற உயிர்களைப் உடைமைகளையும் பலிகொடுத்துப் பரிதவிக்கிறோம்,

கடந்த இரண்டு வாரமாகப் பீகார் மாநிலத்தில் வெள்ளப் பாதிப் பற்றிய தகவல் உலகம் முழுவதும் ஒளிபரப்பானது. எங்கு பார்த்தாலு வெள்ளம், மக்கள் இடுப்பளவு நீரிலும் மார்பளவு நீரிலும் புகலிட நோக்கிக் கிடைத்ததைப் பிடித்தபடி வெளியேறிக் கொண்டிருந்தார்கள் இது குறித்து மோகன் மூர்த்தி என்பவர் 'இந்து பிசினஸ்லைன்' ஏட்டில் ஒரு விரிவான கட்டுரை எழுதியுள்ளார்.

இந்தியப் பிரதமர் மன்மோகன்சிங், பீகார் நிலவரத்தை 'தேசிய பேரிடர்' என்றார். ஆயிரம் கோடி ரூபாய் நிவாரணத் திட்டத்ன அறிவித்தார். ஒரு லட்சத்து 25 ஆயிரம் டன் உணவு தானியத்ை அனுப்புவதாக அறிவித்தார். இது குறித்து மேலைநாடுகளில் பலரு விமர்சித்துள்ளார்கள். அவர்கள் எழுப்பும் கேள்வி இதுதான். "மந்தி சபை ஏன் இதை விவாதிக்கவில்லை? எதிர்க்கட்சிகள் என் செய்கின்றன? 30 லட்சம் மக்கள்

அகதிகளாக வீடிழந்து அகதிகளா இருக்கிறார்களே, நாடாளுமன்றம் ஏன் இது குறித்துக் கூட விவாதிக்கலில்லை? உயிர் பிழைத்தோருக்குக் கஞ்சியும் உதட்டளவில் அனுதாபமும்தானா? இதன் பிறகு அடுத்த பேரிடர் வரும்போதுதான் இதுபற்றிப் பேசுவோமா? பேரிடர் வரும்போது இழப்பை குறைப்பதற்குத் திட்டமிடமாட்டார்களா?

இந்த விஷயங்களில் இந்தியாவின் நிலை கேவலமாக இருக்கிறது. வெள்ளம் வரும்போது இறப்போர் எண்ணிக்கையில் முதல் இடம் வகிப்பது வங்கதேசம். அடுத்த இடத்தில் இந்தியா. உலகத்தில் வெள்ளத்தால் உயிரிழப்போரில் ஐந்தில் ஒருவர் இந்தியர்.

மெக்சிகோ தேசத்தில் கோக்கோயோக் என்னும் இடத்தில் 1974ஆம் ஆண்டு ஒரு சர்வதேச மாநாடு நடத்தினார்கள். ஐக்கிய நாடுகள் சபையின் சுற்றுச்சூழல் காப்புப் பிரிவு அந்த மாநாட்டுக்கு ஏற்பாடு செய்திருந்தது. ஆதாரங்களின் பயன்பாடு, சுற்றுச்சூழல் வளர்ச்சி என்பது மாநாட்டின் தலைப்பு. மாநாட்டின் முடிவில் ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள். "வளர்ச்சியின் நோக்கம் பண்டங்களைப் பெருக்குவதாக இருக்கக்கூடாது. மனிதர்களை வளர்த்தெடுப்பதாக அமைய வேண்டும்."

தீர்மானம் நிறைவேற்றி என்ன செய்வது? மாநாட்டு ஆவணங்களுடன் தீர்மானமும் அடக்கம் செய்யப்பட்டுவிட்டது. பொருட்களைக் குவித்து நுகர்வதில் இன்பம் தேடும் பேராசைக்கு எல்லை கிடையாது. இந்தத் தொற்று நோய் இந்தியர்களையும் தொற்றிக்கொண்டுவிட்டது. அதனால் இயற்கைச் சூழல்களை அழித்து பட்டணங்களையும் சாலைகளையும் விரிவுபடுத்துகிறோம். அதனால் பேரிடர்களை எதிர்கொள்ள நேர்கிறது.

இயற்கையைச் சிதைத்து பட்டண மயமாக பூமியை மாற்றியபோதும் பணக்கார நாட்டவர் தங்களைக் காத்துக்கொள்கிறார்கள் என்கிறார் மோகன் மூர்த்தி. வெள்ளம் வருவதைத் தடுக்க முடியும் என்று அந்த

நாட்டவர்கள் நினைக்கவில்லை. பேரழிவு வரும்போது நமது செயல்பாடு என்னவாக இருக்க வேண்டும். பேரிடரை எப்படி நிர்வகிப்பது என்றே திட்டமிடுகிறார்கள். வடிகால்களைப் பெரிது பெரிதாக எழுப்புவதற்கு மாறாக, வெள்ள நீர் வடிகாலை எட்டும் வேகத்தைக் குறைக்கிறார்கள். கொட்டு மழை பெய்யும் பகுதிகளைத் தேர்ந்தெடுத்து அப்பகுதி நிர்வாகத்துக்கு என அரசாங்கம் அதிக நிதி செலவிடுகிறது. இதைத்தான் முற்காலத்தில் நமது சிற்றரசுகளும் பேரரசுகளும் செய்தன.

வெள்ளம் வருவது இயற்கையான செயல். ஆனால் மனிதர்களின் தவறான செயல்பாடுகளால் வெள்ளப்பெருக்கின் சேதம் அதிகரிக்கிறது. இதை உணர்ந்தவர்கள் வெள்ளப் பாதிப்புத் தடுப்பு நடவடிக்கையில் பணத்தை முதலீடு செய்கிறார்கள். வெள்ளம் வரும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது குறித்து விழிப்புணர் ஏற்படுத்துவதில் சமூகத்தின் அனைத்துப் பிரிவு மக்கள் பங்களிக்கிறார்கள்.

இது போன்ற விஷயங்களில் மனிதர் சாதனையின் அடையாள: சின்னமாக நெதர்லாந்து உள்ளது. இந்நாட்டில் குடியிருப்புகள் ஆற்றுமட்டத்துக்குக் கீழ் உள்ளது. மக்கள் தொகையில் பாதி இப்படிப்பட்ட தாழ்வான பகுதிகளில் வசிக்கிறார். வெள்ளப்பெருக்கு அவர்களுக்கு வாடிக்கையான ஒன்று. அவர்கள் அதனை எப்படிச் சமாளிக்கிறார்கள் தெரியுமா? குடியிருப்புகளுக்கு பின் புறத்தில் பெரிய ஏரிகளை உருவாக்கியுள்ளார்கள் (இராமநாதபுரத்தில் காகம் பறக்காத 19 கண்மாய் ஏரி உள்ளதே அது போல). ஆதலால் நெதர்லாந்து நாட்டின் மேற்குப் பகுதியில் கடல் மட்டத்துக்குக் கீழே வாழ்பவர்கள் கூட வெள்ளத்தால் பாதிக்கப்படவில்லை. இந்தியாவில் அதுபோன்ற திட்டங்கள் எப்போது

வரும்?

மனிதர்கள் சொந்தபந்தங்களை இழப்பதைப் பத்திரிகையில் படிப்பக வேறு. நாமே அனுபவிப்பது வேறு. அடுத்தவர்க்கு நிகழ்வதைக்கூட ஈவு இரக்கம் உள்ளவர்கள்

உணர முடியும். அப்படி ஒரு நிகழ்வு குறிக்க மோகன் மூர்த்தி எழுதுகிறார்.

"1970-ஆம் ஆண்டு மத்தியில் மோகன் சென்னைப் பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்தார் சென்னையில் வரலாறு காணாத வெள்ளம். ஒரு வார காலம் இயல் வாழ்க்கை முடங்கிப்போனது. பத்தாயிரம் மாணவர்கள் நிவாரணப் பணியில் குதித்தார்கள், மோகன், கோட்டூர்புரம் பகுதியில் இரண்டு வாரம் துயர் துடைப்புப் பணியில் ஈடுபட்டார். அப்போது ஒரு மூதாட்டியின் வீட்டுக்குப் போக முடிந்தது. அந்த மூதாட்டி தன் கதையைச் சொன்னார். "திடீரென்று வெள்ளம் வந்து வீட்டுக்கு புகுந்தது. என் ஒரே மகளும் அவளது இரண்டு மாதக் குழந்தையும் தூங்கிக் கொண்டிருந்த நிலையிலேயே வெள்ளத்தில் மூழ்கி போனார்கள்" என்றபடி ஒரு பிளாஸ்டிக் பையை எடுக்கிறாள். அதற்குள் ஒரு நிழற்படம். அந்த மூதாட்டியின் மகளும் குழந்தையும் படத்தில் இருக்கிறார்கள். ஆம், படத்தில் மட்டுமே இருக்கிறார்கள். தாயின் விம்மல் கதறலாக மாறிவிட்டது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சோகத்தை நினைவுகூறும் மோகன், இந்தியாவுக்கு 25 ஆண்டு கால வெள்ள முன்தடுப்புத் திட்ட தேவை என்கிறார். இந்த நேரத்தில் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் எழுதியது நினைவுக்கு வந்தது,

“மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப மணிப்பூ ஆடை அது போர்த்து கருங்கயல் கண் விழித்து ஒல்கி நடந்தாய் வாழி காவேரி!’’

"இரு கரைகளிலும் வண்டுகள் இசை எழுப்புகின்றன. பூக்களையே ஆடையாக அணிந்து புறப்பட்ட காவிரியே உன்னில் துள்ளுகின்ற கெண்டை மீன்கள்தான் உனது கண்களோ? இடையை வளைத்து நெளிந்து நடைபோடும் காவிரியே! நீ வாழ்க" என்று மாதவி பாடுவதாக இளங்கோ எழுதுகிறார்.

காவிரி மட்டும்தானா? எல்லா ஆறுகளும் இப்படி நடைபோட முடியும், கரை நெடுக மரங்கள் வளர்த்தால்.

மரங்கள்! வரங்கள்! வளர்ப்போம்! வாருங்கள்!!

……………..

## அடைக்காக்கத் தெரியாத கோழி!

விளக்கிலே வெளிச்சம் இல்லை. விடியலில் சுகமும் இல்லை இரவிலே கொசு கடிக்கிறது, பகலோ, வியர்வை வடிக்கிறது மாணவர்கள் படிக்க முடியவில்லை . ஆலைகள் ஓடாமல் தொழிலாளர்கள் வாழ்வோ சோகம். விவசாயிகளின் வாழ்க்கை' சொல்லொணாத் துயரம். வாகனங்களுக்கு பெட்ரோல் நிரப்ப முடியவில்லை. அனைத்துச் சிக்கலுக்கும் வேர்க்காரணம் ஒன்றுதான் அது 'மின்வெட்டு'. நீரைக் கொதிக்கவிட்டு மின்சாரம் உற்பத்தி செய்தோம். நிலக்கரியை எரித்து மின்சாரம் உற்பத்தி செய்தோம், அணுவைப் பிளந்து, ஆற்றலைப் பெருக்கி மின்சக்தி உற்பது செய்தோம். அத்தனையும் பற்றாமல் போய்விட்டது.

இந்தச் சூழலை நோக்கும்போது பரமார்த்த குரு கதை ஒன்று நினைவுக்கு வருகிறது. குருவின் ஆடையிலே ஒரு கிழிசல். அதைக் தைப்பதற்கு சீடர்கள் முயன்றார்கள். நூலைத் தேடி எடுத்துவிட்டார்கள் ஊசிதான் கண்ணில் படவில்லை. யார் ஊசி வாங்கி வரப்போவது என்பதில் போட்டி. எட்டு பேரும் புறப்பட்டுப் போனார்கள். இரண்டு கோடாரிகளும் கொண்டு போனார்கள். கோடாரி எதற்கு? ஒரு சிறு ஊசியை எட்டு பேர் எப்படி சுமந்து வரமுடியும்? ஆதலால் ஒரு பனை மரத்தை வெட்டித் துண்டு போட்டுத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

ஊசியை வாங்கிய சீடர்கள் அதைப் பனை மரத்தில் குத்தி எட்டு பேருமாகச் சுமந்து வந்தார்கள். முன்னால் நடந்த மடையன் (ஒரு சீடனின் பெயர்) பள்ளத்தில் கால் நொடித்ததால் இடறி வீழ்ந்தான் மற்றவர்களும் மரத்தைப் போட்டுக்கொண்டு வீழ்ந்தார்கள். கையை ஊன்றி எழுந்து தூசி தட்டி மீண்டும் மரத்தைச் சுமந்து நடந்து அதனை வீடு சேர்த்தார்கள். குரு வெளியில் வந்து பார்த்தார். "ஊசி

வாங்கப் போனவன் எங்கே? எதற்குப் பனை மரம்?" என்றார்.

சீடர்கள், "ஊசிதான் வாங்கி வந்தோம்" என்று மரத்தைத் தடவினார்கள். ஊசியைக் காணவில்லை. அதைத்தான் வழியிலேயே தொலைத்துவிட்டார்களே!

இன்றைய மின் வெட்டைப் பார்க்கும்போது மேலே சொன்ன கதை நினைவுக்கு வருகிறது.

முதலில் உற்பத்தியைப் பெருக்கப் போகிறோம் என்று பட்டணங் களையும் எந்திரங்களையும் பெருக்கினார்கள். மக்களை அங்கே குவித்தார்கள், உணவு உற்பத்திக்கான சாதனங்களைப் பட்டணத்தில் உற்பத்தி செய்வதாகச் சொன்னார்கள். கற்றலை மேம்படுத்துவதாகக் கணினியையும் கண்டுபிடித்தார்கள். உற்பத்தி மட்டும் பற்றாக் குறையாகவே போனது.

1960-களில் உணவு தானிய உற்பத்தியைப் பெருக்குவதற்காகப் பெட்ரோல், டீசலைப் புகுத்தினார்கள். அரை நூற்றாண்டுக்குப் பிறகு தானியங்களைப் பயன்படுத்தி டீசல் உற்பத்தி செய்கிறார்கள். அதாவது 1960ம் ஆண்டுகளில் தானியம் உற்பத்தி செய்ய டிராக்டர் புகுந்தது. 2008-ல் டிராக்டர் ஓடுவதற்கு (டீசல் தயாரிக்க) தானியம் விளைவிக்கப் படுகிறது. வேடிக்கையாக இல்லையா? இன்று உலக மக்கள் தொகையில் பாதிப்பேர் உணவுக்கு உத்தரவாதம் இல்லை, ஆனால் கோதுமை, சோயா, மொச்சை, மக்காச்சோளம் ஆகிய உணவு தானியங்களைப் பயன்படுத்தி டீசல் தயாரிக்கிறார்கள்.

சுற்றுச்சூழல் போராளி சுந்தர்லால் பகுகுணா இப்படிச் சொன்னார், "காட்டுவளம், கடல்வளம், கால்நடை வளம், பயிர்வளம் இவைதான் இயற்கை வாழ்வாதாரங்கள். இவை மீண்டும், மீண்டும் புதுப்பிக்கப் படக்கூடியவை. தொழிற்புரட்சி செய்த பெருந்தவறு, நிலத்துக்கு அடியில் உள்ள பொருள்கள் மீது மதிப்பை ஏற்படுத்தியது. இரும்பும், பொன்னும், பெட்ரோலும், வெள்ளியும், செம்பும், அலுமினியமும், நிலக்கரியும் ஓர் அளவுக்கு உட்பட்டவை.

இவை புதுப்பிக்க முடியாதவை. ஒரு சிலரின் கட்டுப்பாட்டில் உள்ளவை.

நிலத்தடியில் உள்ள பண்டங்களை எடுக்கும் போதும், எடுத்துச் சுத்தப்படுத்தும் போதும், சுத்தப்படுத்தியதை பயன்படுத்தும் போதும் அவை சூழலை மாசுபடுத்துகின்றன. ஆனால், விளையும் பயனோ அற்பமாகவும் சொற்பமாகவும் உள்ளது. இதைப் புரிந்து கொள்வதற்குப் பில் மொல்லிசனைத் துணைக்கு அழைப்போம்.

பில் மொல்லிசன் ஆஸ்திரேலிய நாட்டுப் பேராசிரியர். இவர் நிலைத்து நீடிக்கவல்ல உழவாண்மைக் கொள்கையை உலகம் முழுவதும் பரப்பியவர். இவர் வெள்ளைக் கோழி (ஒயிட் லெகான்) முட்டை போடுவது பற்றி விவரிக்கிறார்.

"பறவைகள், விலங்குகள், மனிதர்கள் வாழும் இடங்களான சுற்றுச்சூழலை அழித்து சுரங்கங்கள் அமைத்தோம். இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து அந்தத் தூசுகளைக் குவித்தோம். இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து ஒரு ஃபேக்டரி எழுப்பினோம். சுரங்கப்பொருளை ஃபேக்டரிக்குக் கொண்டு செல்ல வேண்டுமே. இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து லாரி, ரயில் செல்ல பாதை அமைத்தோம். இன்னும் ஒரு ஃபேக்டரியில் தாதுக்களைச் சுத்தம் செய்தோம். இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து எந்திரம் செய்தோம். மேலும் கொஞ்சம் சூழலை அழித்து பெட்ரோல், டீசல் கிணறு அமைத்தோம். பெட்ரோலியப் பொருட்களைப் பயன்படுத்தி ஃபெர்ட்டிலைசர் தயாரித்தோம். மோட்டார் படகு விட்டு மீன் பிடித்தோம். டிராக்டர் ஒட்டி தானியம் உற்பத்தி செய்தோம். இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து, ஃபேக்டரி கட்டினோம். அதில் மீனையும், புண்ணாக்கையும், தவிடையும், தானியத்தையும் கலந்து கோழித் தீவனம் தயாரித்தோம். இன்னும் கொஞ்சம் சூழலை அழித்து, கோழி வீடு கட்டினோம். கோழிக்குப் பக்கமாக தீவனத்தைக் குவித்தோம். கோழி நின்ற இடத்தில் முட்டை போட்டது. ஆனால், அந்தக் கோழிக்கு

அடைகாக்கவும் குஞ்சு பொறிக்கவும் தெரியாமல் போய்விட்டது. அந்தப் பணிகளை இப்போது மனிதன் செய்து கொண்டிருக்கிறான்."

ஆஹா உண்மைதானே. கிராமப்புறத்தில் கூடையில் கவிழ்த்து வைக்கப்பட்ட கோழி குப்பையைக் கிளறி பூச்சி, புழு தின்று சேவலுடன் கூடி இருட்டறை தேடி முட்டை இடுகிறது. முட்டை மீது உட்கார்ந்து குஞ்சும் பொறிக்கிறது. குஞ்சுக்கு வெப்பம் தந்து வளர்க்கிறது. இரை தேடக் கற்றுக் கொடுக்கவும் செய்கிறது.

இப்போது பில் மொல்லிசனின் நையாண்டி புரிகிறதா? காடுகள்தான் நமது வாழ்வாதாரங்கள். காடுகளை அழித்து உணவு உற்பத்தி செய்கிறேன் என்பது முன்னுக்குப் பின் முரணாக உள்ளது. பட்டிக் காட்டுக்குச் சோறு போட, பட்டணத்தை விரிக்கிறேன் என்பது. கண்களை விற்றுச் சித்திரம் வாங்குவது போன்றது. பாரி வள்ளல் ஆண்ட பரம்பு மலையில் நால்வகை உணவு, மனித உழைப்பின்றியே கிடைத்ததாக கபிலர் என்ற கவிஞர் பாடுகிறார். பலாப்பழம், தேன் மூங்கிலரிசி, கிழங்கு ஆகிய நான்கும் விளைந்தனவாம்.
உலக மக்களின் பசிப்பிணி களைய ஒரேவழி, பூமித்தாயைக் கம்பளம் போர்த்துக் காப்பது மட்டுமே. அதற்கு மகன், மகள்கள் நாம் எல்லோரும் மண் மீது பேரன்பு கொண்டவர்களாய் இருக்க வேண்டும். பேரன்பும் பெரும் பாசமும் என்றென்றும் இயற்கையின் மீதும் கொண்டால் உலகம் உய்வுறும். பிரபஞ்சம் எப்போதும் ஈரமாக இருக்கும். நம் மனங்களைப் போல.

…………..

## அடி காட்டுக்கு, நடு மாட்டுக்கு, நுனி வீட்டுக்கு!

நான் சந்தித்த இயற்கை நேயர்களில் அந்த ஆரோவில்காரர் (பாண்டிச்சேரி) பெர்னார்டு ட்டி கிளார்க் மிக முக்கியமானவர். இவர்தான் என் இயற்கை வேளாண்மை குரு.

ஒரு நாள் இயற்கை உழவாண்மைப் பயிற்சி நேரம். தமிழன் எப்படி நடந்து கொள்கிறான் என்பதை நடித்துக்காட்டினார்.

காலையில் கண் விழிக்கும் ஒருவன் கண்ணைக் கசக்கி கொள்கிறான். தொங்கும் வேட்டியை முழங்கால்களுக்கு மேல் மடித்துக் கட்டுகிறான். தலையை பின்னுக்கு வளைத்தபடி கண்களை மேலே சுழலவிட்டபடி முன்னோக்கி நடக்கிறான். ஒரு வேப்பமரத்துக் கிளை கண்ணில் பட்டுவிடுகிறது. அது கீழ்நோக்கி வளைந்து காற்றில் ஆடியபடி உள்ளது.

மனநிறைவோடு நடையில் நிதானம் கூட்டி முன்னோக்கி நடப்பவன், தொங்கும் கிளை நோக்கி வந்தவன், கையை மேலே உயர்த்தி உடம்பை ஸ்பிரிங் போல வளைத்து மேலே தாவுகிறான். கிளையும் கையில் கிடைத்துவிட்டது. இலை, தழை, பூ, காயோடு ஒரு கொத்தை ஒடித்துக் கொண்டு கிளையை விட்டுவிடுகிறான். ஓடித்த கொத்தில் ஒரு பென்சில் மொத்தம் நீளத்துக்கு ஒரு குச்சியை ஒடித்துக்கொண்டு எஞ்சியதை பின்பக்கமாக வீசுகிறான். குச்சி பல்லுக்கிடையில் மெல்லப்படுகிறது.

இங்கே நாம் சொல்லவருவது இதுதான். இயற்கையிலிருந்து தேவைக்கு அதிகமாகவே எடுக்கிறோம். தேவையானதை எடுத்துக்கொண்டு மீந்ததை கண்ணை மூடிக்கொண்டு வெளியே வீசுகிறோம். இதற்குப் பெயர் 'பயன்படுத்தி வீசி எறி' என்பதாகும். இப்படி சூழல் மீது அக்கறை இல்லாத சுயநலம் மேற்கு நாடுகளுக்கே உரிய கலாச்சாரம்.

புதுக்கோட்டை மாவட்டம் கீரனூர் பகுதியில் வயலில் வேலை செய்துகொண்டிருந்த ஒரு பெண்மணி, 'அடி காட்டுல, நடு மாட்டுல, நுனி வீட்டுல... அது என்ன?' என்று என்னிடம் ஒரு விடுகதை போட்டார். எனக்கு விடை தெரியலை. 'நெல்லு அறுக்கும்போது அடிக்கட்டையை வயக்காட்டுலயே விட்டுடுறோம். நடுவுல இருக்குற வைக்கோலை மாட்டுக்குக் கொடுக்கிறோம். நுனியில் இருக்கிற நெல்லை வீட்டுக்கு

எடுத்துட்டுப் போறோம்' என்று அந்தப் பெண் விடையைச் சொன்னார். இந்த நிலை மாறி இன்னைக்கு வைக்கோலை எரிக்கிறோம். நெற்பயிரின் உயரத்தைக் குறைக்கிறோம். மாட்டுக்கான உணவையும் மறுக்கிறோம். இதுதான் விவசாயம் சந்திக்கிற பிரச்சினைக்கு மூலக்காரணம் . என் வாழ்வில் இந்த விடுகதை பெரிய மாற்றத்தை உருவாக்கியது .

நமக்கு எந்த பொருளும் வீண் கிடையாது. வயலில் நெல் அறுவடை செய்யும்போது, அடிக்கட்டையை விட்டு,விட்டு அறுத்து எடுக்கிறோம். அது மட்கி மண்ணுக்கு உரமாகிறது. நடு பகுதியான வைக்கோலை நாம் வளர்க்கும் மாடுகளுக்கு கொடுக்கிறோம். அதை உண்டு விட்டு, நமக்கும் உழைக்கிறது. பாலும் கொடுக்கிறது. நிலத்துக்கு உரத்தையும் கொடுத்துவிடுகிறது.

நுனியில் உள்ள நெல்லை வீட்டுக்கு எடுத்துச் செல்கிறோம். இந்த நெல் மணிகளை குத்தும் போது, அரிசியும் தவிடும் கிடைக்கிறது. அரிசியை நாம் சமைத்து சாப்பிடுகிறோம். தவிட்டை மாடுகளுக்கு கொடுக்கிறோம். அதற்கு உபகாரமாக மாடுகள்  சாணத்தையும் கொடுத்துவிட்டு, எந்த வயலில் நெல் விளைந்ததோ, அந்த நிலத்தை மீண்டும் உழுதி விதைக்க உதவியாக இருக்கிறது. இப்படி நாம் எந்த பொருளையும் வீசி எறியாமல், அதை முழுமையாக பயன்படுத்தி வருகிறோம்.

இது குறித்து ஒரு கதையைப் பார்ப்போம்.

ஒரு பௌத்த ஆசிரமம். புத்தர் சுற்றி வரும்போது ஒரு பிட்சுவின் குடிலுக்குள் நுழைந்தார். பிட்சுவின் போர்வையில் கிழிசல் தென்பட்டது. கிழியாத போர்வை ஒன்றைக் கொடுப்பதாகச் சொன்ன புத்தர். ஒரு போர்வையையும் கொடுத்தார். ஒரு வாரம் சென்றது. பிட்சுவின் குடிலுக்குள் நுழைந்த புத்தர் கேட்டார். "போர்வை பயனுள்ளதாக இருக்கிறதா?" “ஆமாம் குருவே" இது பிட்சுவின் பதில். "பழைய போர்வையை என்ன செய்தாய்?" "கிழிசலை வெட்டித் தைத்துப் படுக்கை விரிப்பாக்கிக் கொண்டேன் குருவே!" "முன்பு படுக்கை

விரிப்பாக இருந்தது?" "இப்போது தலையணை உறையாக!" "முன்பு தலையணை உறையாக இருந்தது?" “வாயில்படி அருகில் கால் மிதியாக உள்ளது குருவே. அதன் மீது நடந்துதான் தாங்கள் உள்ளே வந்தீர்கள்" "முன்பு கால்மிதியாக இருந்தது?" "விளக்குத் திரியாக நம் முன் உள்ள தீபத்தில் எரிந்து கொண்டுள்ளது குருவே

இப்படியாக வீண் என்று எதையுமே பார்க்காத கலாச்சாரம் நமது கலாச்சாரம். மேற்கு தேச கலாச்சாரத்தால் எவ்வளவு சீரழிந்து போனோம். உணவு விளைய வேண்டிய நிலங்களை எல்லாம் வீடு கட்டும் மனை என்று ஒதுக்கினோம். ஒரு சிலர் வீடு கட்டினோம். நமது குப்பையை எல்லாம் வீடு இல்லாத மனைகளில் வீசினோம். குறிப்பாக உணவு பண்டங்களின் மிச்சம், மீதி உள்ள பிளாஸ்டிக் பைகளை வீசினோம். மழைத் தண்ணீரும் தேங்கியது. வழிப்போக்கர்களும் ஒதுங்கினார்கள். நமக்கு வேண்டிய கொசுக்களையும் நோய்க்கிருமிகளையும் நாமே உருவாக்கிக் கொண்டுவிட்டோம்.

இது மட்டுமா, நகரமெங்கும் குப்பையாக்கினோம். இந்தக் குப்பைகளில் இரண்டு வகை உண்டு. ஒன்று மக்கும் குப்பை. இலை, தழை, பூ, காய், கனி, விலங்குகளின் உடல், கழிவு இவையெல்லாம் மக்கி மீண்டும் மண்ணாகி செடி கொடி வளர்க்கக்கூடியவை. மற்றவை மக்காதஆவை. பிளாஸ்டிக், கல், கண்ணாடி, ரப்பர், செருப்பு போன்றவை எவ்வளவு காலமானாலும் உருமாறாதவை. இரண்டையும் கலந்து வீதியில் எறிந்தோம். இதன் மூலம் மக்கக்கூடிய பொருளையும் மக்காமல் செய்துவிட்டோம்.

இப்படி இருவகைப்பட்ட கழிவுகளையும் வாரிக்கொண்டு போய்க் கொட்ட வாகனமும் (லாரி) ஆட்களும் ஏற்பாடு செய்தோம். இதன் மூலம் வளி மண்டலத்தைக் கரியாக்கினோம். குப்பையை பட்டணத்தில் இருந்து தூரத்தில் கொண்டு சென்று கொட்ட ஏற்பாடு செய்தோம். புயல், மழைக் காலத்தில் வெள்ளம் பிடித்துவைத்து மக்களுக்கும் கால்நடைகளுக்கும் மற்ற உயிர்களுக்கும்

வாழ்வாதாரமாக இருந்த ஏரியைக் குப்பைக் கிடங்காக்கினோம். இப்படித்தான் கோவையிலும் நடக்கிறது. கோவை நகரிலிருந்து குப்பையை 17 கி.மீ. தூக்கிச் சென்று ஒரு கிராமத்துக்கு அருகேயுள்ள ஏரியை நிரப்பினார்கள். குப்பையை வெளியேற்றுவதற்காக ஆகும் செலவே மாநகராட்சியின் முக்கியச் செலவு. லாரி கக்கும் புகையால் வானத்தில் கரிமூட்டம். ஏரியில் கொட்டியதால் வெள்ளம் வந்தபோது நீரைப் பிடித்து வைத்துக்கொள்ள நீர்நிலை இல்லாது போனது. ஊருக்குப் பக்கத்தில் குப்பை கொட்டியதால், ஊர் மக்கள் நோயாளி களானார்கள். இதைத்தான் நாகரிக வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி என்று பேசிக்கொள்கிறோம்!

தவமுனி ஒருவர் சொல்கிறார், "100 வருடங்களுக்கு முன்பு ராஜாக்களும், ராணிகளும் நினைத்துக்கூடப் பார்க்காத சௌகரியங்களை இன்று சாதாரண மனிதன் அனுபவிக்கிறான். ஆனால் மகிழ்ச்சியில் இருக்கிறானா? என்ன நடக்கிறது? மகிழ்ச்சியைத் தேடும் முயற்சியில் மனிதன் இந்த உலகத்தைத் தன் வசதிக்குச் சுரண்டுகிறான். எந்த அளவுக்கு உலகத்தைச் சீரழித்திருக்கிறான் என்றால், இந்தக் கிரகத்தின் இருப்பே அச்சுறுத்தலுக்கு ஆகும்படிக்குச் சீரழித்திருக்கிறான்!"

நாம் உலோகங்களையும், கரி, டீசல், பெட்ரோல் போன்ற உரை படிவ எரிபொருட்களையும், மரம், சட்டம், பலகை போன்றவற்றையும் அளவில்லாது பயன்படுத்துகிறோம். இந்தப் போக்கு நீடித்தால் 2030க்கும் 2040க்கும் இடையே மனிதனுக்கு இன்னொரு கிரகம் தேவைப்படும். இப்படிச் சொல்கிறது WWW நிறுவனம்.

மக்களுக்குச் சூழல் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காக உலக வன்விலங்கு நிதியம் (WWF) செயல்படுகிறது. பூமியானது தனது வளங்களை 30 விழுக்காடு கூட புதுப்பித்துக்கொள்ள முடியவில்லை என்கிறது WWF ஆய்வு. இலண்டனில் உள்ள அதன் பொது இயக்குனர் லீப், "இதே கதியில் போனால் பூமி நீடித்திருக்க முடியாது. நிலைமை படுமோசமாகிக்கொண்டு இருக்கிறது" என்று சொன்னார்.

இலண்டன் நகரில் உள்ள விலங்கியல் கழகமும் கலிபோர்னியா விலுள்ள, பூமி அடிச்சுவடு நெட்ஒர்க் இரண்டுடனும் இணைந்து WWF செய்த ஆய்வறிக்கை இப்படிச் சொல்கிறது. 'காடுகள் மீண்டும் வளர்வதற்குள் வெட்டப்படுகின்றன. டீசல், பெட்ரோல் சேமிக்கப்படும் மன்பே உறிஞ்சப்படுகின்றன. காடு உறிஞ்சும் வேகத்துக்கும் கூடுதலான வேகத்தில் காற்றில் கரி உமிழப்படுகிறது.

ஒவ்வொரு மனிதனின் தேவையையும் நிறைவு செய்யத் தேவைப்படும் பரப்பு அதிகரிக்கிறது. துபாய், அபுதாபி போன்ற நாடுகளில் வாழும் ஒரு மனிதனின் தேவையை நிறைவு செய்ய இருப்பிட வசதி, பணி இடவசதி, பயிர் நிலம், மேய்ச்சல் நிலம், வனம், மீன்குளம் போன்றவை கொட்டும் கழிவுக்காகத் தேவைப்படும் நிலம் கரியை உள்வாங்கத் தேவையானவை அனைத்துமாகச் சேர்ந்து 23 ஏக்கர் நிலம் தேவைப்படுகிறது.

இரண்டாவதாக அதிகம் இடம் தேவைப்படும் நாடு அமெரிக்கா. இன்றைக்கு பிறக்கும் குழந்தை 25 வயது வாலிபத்தில் இருக்கும்போது, அது வாழ்வதற்கு இன்னொரு கிரகம் தேவைப்படும். அதாவது இந்தக் கிரகத்தில் வாழ்வு மறுக்கப்படும். அது செய்த குற்றமென்ன? வரப் போகின்ற சந்ததியினருக்கு எதை விட்டுவைக்கப் போகிறோம்?

மக்காத பொருள் நுகர்வைக் குறைப்போம். மக்கும் பொருளை மறு சுழற்சியில் சேர்ப்போம். பூமியைப் பச்சைக் குடையால் காத்து காய்ச்சலைத் தணிப்போம். வேறு மார்க்கம் எதுவும் இருப்பதாகப் புலப்படவில்லை .

………………………

## இனி பூமி காப்பாற்றப்படும்!

இத்தனை கோடி ஆண்டுகளில் மனித இனம் எதை எதை எல்லாம் உண்ணலாம், உணவை எப்படி எல்லாம் தயாரிக்கலாம் என் கற்றுக்கொண்டுவிட்டது. இனம் அழிந்துவிடாமல் இருப்பதற்கு இது முக்கியம். இன்று

ஸ்பைருலினா, அசோலா என்று இரண்டு பாசிகளைக்கூட உண்ணப் பழகியிருக்கிறோம். ஆனாலும் இன்னும் ஐந்தில் ஒருவர் பசியுடன் உறங்கப் போகிறார். நான்கில் மூன்று பேர் சத்துணவு பற்றாக்குறையால் நோய்வாய்ப்படுகிறார்கள். இப்படி ஒரு நிலை அவசியம்தானா?

எல்லாச் செடி கொடி மரங்களும் எல்லா தட்பவெப்ப நிலைகளிலும் வளர்வதில்லை. என்.ஐ.வால்லிலோ என்பவர் ஒரு ரஷ்ய விஞ்ஞானி.

இவர் பயிர்ச்செடி தோற்றம் கொண்ட மையங்களைப் பட்டியலிட்டார். உயிரினப் பன்மயத்துக்குப் பிரபலமான எட்டு உலக மையங்களில் இந்தியாவும் ஒன்று. இங்கு 356 பயிர் செய்யப்படும் இனங்களும், அவை போன்ற காட்டுச் செடிகளில் 326ம் தோன்றி நின கொண்டுள்ளதாக விஞ்ஞானிகள் அடையாளம் காட்டியுள்ளார்கள்.

மனித சமுதாயம் தளிர் நடை போட்டபோது தங்கள் வாழு சூழலுக்கு உகந்த பயிர் வளர்த்தார்கள். தேவைக்கு மிஞ்சிய பொருள்களை மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டார்கள். அதன் பிற மிச்ச சொச்சங்களை தொலைவில் கொண்டு சென்று விற்க ஆரம்பித்தார்கள்.

தானியம் : நெல், கோதுமை, மக்காச்சோளம், பருப்பு : துவன உளுந்து, பயறு, சோயா, எண்ணெய் வித்து : எள், தேங்கா நிலக்கடலை, சோயா, சூரியகாந்தி, கிழங்கு : உருளை, சேனை, காய்கறி: கத்திரி, தக்காளி, வெண்டை என இப்படிப் பயிர் செய்யும் பயிர்களின் எண்ணிக்கை குறைந்து போனதால் கடந்த நூறு ஆண்டுகளில் பல பயிர்ச் செடிகொடிகள் மறைந்து போய்விட்டன. இது பற்றிய சிந்தனையில் மூழ்கி இருந்தபோது ஒரு கடிதம் உற்சாகத்தைச் சுமந்து வந்தது.

சியாமும் அவரது நண்பர்களான அபினவ், சுகுமார், அரவிந்த், விவேக் ஆகிய மூவரும் திருப்பூர் சுப்பையா மெட்ரிகுலேஷன் பள்ளியில் எட்டாம் வகுப்பில் பயில்கிறார்கள். இவர்கள் இயற்கை மீது ஆர்வமும் சுற்றுச்சூழல் மீது அக்கறையும் உள்ளவர்கள்.

தேசிய அறிவியல் கழகம் இந்த ஆண்டு ஆராய்ச்சிக்காக 'புவிக்கோளம்' என்னும் தலைப்பை முன்வைத்தது. சியாமும் நண்பர்களும் அழிந்துவரும் தாவரங்களைப் பாதுகாப்பதை தங்களது ஆராய்ச்சிக்கான இலக்காகத் தேர்வு செய்தார்கள். அந்தத் தாவரங்கள் மனித வாழ்வில் பயன்படக்கூடியதாக இருக்க வேண்டும் என்றும் முடிவு செய்தார்கள்.

இன்று தமிழ்நாட்டில் 40 சதவிகித மக்கள் நீரிழிவு நோயால் அவதிப்படுகிறார்கள். இந்நோயை சர்க்கரை நோய் என்றும் அழைக்கிறார்கள். பாதிக்கப்பட்ட வருக்கு சிறுநீரகக் கோளாறு, செரியாமை என்று அடுத்தடுத்து பல நோய்களும் தொடரும். முன்பெல்லாம் சர்க்கரை நோய் பணக்காரர்களுக்கு வரும் என்பார்கள். இப்போது பட்டித்தொட்டியெல்லாம் காணப்படுகிறது. குழந்தை பிறக்கும் போதே நீரிழிவு நோயுடன் பிறக்கிறது. எனவே இந்த நோயைக் கட்டுப்படுத்தும் ஐந்து தாவரங்களைத் தேர்வு செய்ய முடிவு செய்தார்கள்.

நாவல், வில்வம், விளா (விளாம்பழம்) களா (புதர்), கொடுக்காய்புளி என இந்த ஐந்து மரங்களும் நீரிழிவு நோயைக் குணப்படுத்தக்கூடியவை என்பது அவர்களின் ஆய்வில் தெரியவந்தது.

அறிந்த விவரங்களை உறுதிப்படுத்திக்கொள்ள கோவையில் உள்ள தமிழ்நாடு வேளாண் பல்கலைக் கழகம் சென்று அறிவை ஆழப்படுத்திக் கொண்டார்கள். பொருள்களின் மதிப்பைக் கூட்டுவது குறித்து அறிந்தார்கள். பழக்கூழ் (ஜாம்), பழப்பிளி (ஜெல்லீஸ்), பழரசம், மிட்டாய், ஊறுகாய் தயாரிக்கக் கற்றார்கள். இந்தக் கன்றுகளை உற்பத்தி செய்வது எப்படி, இனப்பெருக்கம் செய்வது எப்படி என்றும் கற்றார்கள். இவற்றைச் சிறு, குறு உழவர்களுக்கு வழங்கி அவர்களது வருவாயை உயர்த்த முடிவு செய்தார்கள். இந்த மரங்கள் மாசுகளை உறிக்க மண்ணையும் காற்றையும் தூய்மைப்படுத்துகிறது எனவும் அறிந்தார்கள்' இதன் மூலம் பூமியையும் காக்கமுடியும் என்ற மகிழ்ச்சி ஏற்பட்டது

சேவை தன் வீட்டில் தொடங்குகிறது என்பார்கள். தங்கள் பள்ளி பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் பணியைத் தொடங்கினார்கள். நிறைய பெற்றோர்களுக்கு இம்மரங்கள் பற்றி ஏதும் தெரியாது எனக் தெரியவந்தது. அனைவருக்கும் இம்மரங்களின் சத்துக்கள் மருந்துக் குணங்கள் பற்றி குறிப்புகளைக் கொடுத்தார்கள். பள்ளிக்கு அருகே உள்ள சிறுப்பூளுவப்பட்டி, வேலம்பாளையம், காவிப்பாளையம் ஆகிய மூன்று ஊர்களைத் தேர்வு செய்தார்கள். கிராம அலுவலர் பாலசுப்ரமணியம் மூலமாக உழவர்களை அணுகி விழிப்புணர்ச்சி அளித்தார்கள், 45 உழவர்களிடம் பழரசம், பழப்பிளி, பழக்கூழ், மிட்டாய், ஊறுகாய் ஆகியவற்றைக் கொடுத்தார்கள்.

இந்த மரங்களைத் தங்கள் நிலங்களில் நட்டு வளர்க்க உழவர்கள் சம்மதித்தனர். நட்டுக் கொடுத்த பிறகு அவை எப்படி வளர்கின்றன என்று பார்க்க மீண்டும் மீண்டும் அந்தத் தோட்டத்துக்குப் போனார்கள். சந்திரகாவி நடுநிலைப்பள்ளி, சிறுபூளுவப்பள்ளி நடுநிலைப்பள்ளி, காவிரிப்பாளையம் நடுநிலைப்பள்ளி ஆகிய பள்ளி மாணவர்களை அணுகி, அப்பள்ளிகளில் இம்மரங்கள் நடப்பட்டன. சுப்பையா மெட்ரிகுலேஷன் பள்ளியிலும் இம்மரங்கள் நடவு செய்யப்பட்டன.

பள்ளி ஆண்டுவிழாவின் போது கடை விரித்தார்கள். மாணவர், பெற்றோர், உழவர் அனைவரையும் பழரசம், பழப்பிளி, பழக்கூழ். மிட்டாய், ஊறுகாய் அனைத்தையும் சுவைத்துப் பார்க்கக் கொடுத்தார்கள்.

டான்போஸ்கோ நெட், கருணை இல்லம், காது கேளாதோர் வாய் பேசாதோர் பள்ளி, முருகப்பாளையம் சேவை நிறுவனம் போன்ற ஆதரவற்ற குழந்தைகள் இல்லத்திலும் தகவல்களையும் செடிகளையும் வழங்கினார்கள்.

பழமுதிர்நிலையம், உழவர் சந்தை, டிபார்ட்மெண்டல் ஸ்டோர் என்று எதையும் விட்டுவைக்க வில்லை. இந்தப்

பழங்களையும் தங்கள் தயாரிப்புகளையும் விற்கும்படி கேட்டுக்கொண்டார்கள்.

சியாமும் நண்பர்களும் நீரிழிவு மையங்களுக்கும் மருத்துவ மனைகளுக்கும் போனார்கள். அங்கெல்லாம் நோயாளிகளுக்கு இப்பழங்களை உணவாக வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

பூமி காப்பதற்கான பசுமைப் படையில் இந்த மாணவர்களும் இணைந்திருப்பதில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி. இனி பூமி காப்பாற்றப்படும்.

……………………………….

மகிழ்ச்சி தரும் செய்தி!

தை மாதத்தின் தலைவாசலில் இருந்து சிந்திக்கிறோம். சாதி சமயம் கலவாத தமிழர்களின் அறுவடைத் திருவிழா, பொங்கல் திருநாள். பொங்கல் திருநாளைக் கொண்டாட தமிழகம் தயாராவதே தனித் திருவிழாதான். ஆடி மாதத்திலும், புரட்டாசி மாதத்திலும் விதைத்த பயிர்கள் அறுவடையாகும். ஒரு வாரத்துக்கு முன்பே சந்தை களைகட்டும். தங்களிடம் உள்ள ஆடு, மாடு, கோழி, கரும்பு, வாழை போன்றவற்றை சந்தையில் குவித்து கையில் பணத்தோடும், பண்டங்களோடும் உழவர்கள் வீடு திரும்புவார்கள். கைவினைஞர்கள் மண்ணைக் குழைத்து அடுப்பு, பானை, சட்டி எல்லாம் செய்து சுட்டு விற்பார்கள். சொல்லப்போனால், ஒட்டுமொத்த தமிழ்ச் சமூகமும் புதியதொரு பருவ காலத்துக்குத் தன்னைத் தயார் செய்து கொள்கிறது.

மொத்தத்தில் இயற்கைச் சக்திகளுக்கு மனிதர்கள் தலைவணங்கும் நாள் பொங்கல் திருநாள். அனைத்து சக்திகளுக்கும் மூல ஆதாரமாய் விளங்குவது கதிரவன். ஆதலால் அடுப்புகூட வீட்டுக்கு வெளியே வந்து விடுகிறது. மண்ணில் விளைவித்த அரிசி, கரும்பு, வாழை, மஞ்சள் போன்றவை வணக்கத்துக்கு உரியவை ஆகின்றன. மாடு தந்த பால் பொங்கி பொங்கல் தயாராகிறது. தமிழ்நாடு முழுவதும் தாம்பூலத்தில்

கரும்பால் தட்டி "பொங்கலோ பொங்கல், பொங்கலோ பொங்கல்" என்று முழங்குவது கேட்கிறது. பால் பொங்குவதுபோல வாழ்க்கையிலே இன்பம் பொங்க வேண்டும் என்பது எல்லோருடைய விருப்பமாக உள்ளது. தை பிறந்தால் வழி பிறக்கும் என்ற சொற்கள் தமிழர்கள் வழக்கில் உள்ளது. குளிர் காலம் மறைந்து வெயில் காலம் தொடங்குகிற தை முதல் நாளை தமிழாண்டின் முதல் நாளாகவே கொண்டுவிட்டார்கள்.
மனிதர்கள் தங்களுக்கு மட்டும் பொங்கல் கொண்டாடவில்லை.

மாடாக உழைத்த இவர்கள் மாட்டுக்கும் பொங்கல் வைக்கிறார்கள். குழந்தைகளுக்கு பால் கொடுக்கும் பசு தாயாகவே மதிக்கப்படுகிறது. அதனால், அதற்கு பூஜை செய்து சோறு ஊட்டுகிறார்கள். பொட்டு வைத்து மாலை அணிவிக்கிறார்கள், காளையும் அதற்கு ஈடான மரியாதையைப் பெறுகிறது. மாடு என்பது சக்தியாக, தாயாக, பயிர்த் தொழிலுக்கு ஆதாரமாகப் பயன்படுவதால், மாடுகளே ஒரு காலத்தில் தெய்வமாக வணங்கப்பட்டது. இன்றும் நாளையும் கூட விளங்கும்.

இன்று நாகரிக முன்னேற்றத்தால் பூமி வெப்பம் அதிகரிக்கிறது. சூழலில் புதுப்பிக்கக்கூடிய சக்தியை உலகில் பலரும் தேடுகிறார்கள். அப்படிப் புதுப்பிக்கக்கூடிய ஆதாரமாக காலங்காலமாக விளங்கி வருவது நமது மாடு. ஒரு புள்ளிவிவரம் நமக்குச் சில தெளிவைக் கொடுக்க முடியும்.

2003-ஆம் ஆண்டு கால்நடைக் கணக்கெடுப்பின்படி நாட்டில் 18 கோடியே 52 லட்சம் கால்நடைகள் உள்ளன. இன்னமும் நாட்டில் உள்ள பயிர் நிலத்தில் பாதியை மாடுகள் கொண்டுதான் உழவு செய்கிறோம், ஒரு கோடியே 20 லட்சம் மாடுகள் வண்டி இழுக்கின்றன. தமிழ்நாட்டில் மைசூர் மாடுகளும், மலை மாடுகளும், உம்பளாச்சேரி கொம்பில்லா மாடுகளும், காங்கேயத்தின் வலிமைமிக்க மாடுகளும் ஏரிலும், வண்டியிலும் செல்வதை ஆங்காங்கே காணமுடியும். 40 ஆண்டுகளுக்கு முன்பு கிணற்றில் உள்ள தண்ணீரை மேலே

கொண்டுவருவதற்குக்கூட காளைகளைத்தான் பயன்படுத்தினோம்.

இன்று எந்திரங்கள் மிகுந்து வருவதால், மாடுகள் மனிதருக்குச் சுமை என்று நினைக்கிற மனோபாவம் வருகிறது. இன்றும் மாடுகள் சக்தியாகப் பயன்படுத்தப்படுவதால் 60 லட்சம் டன் பெட்ரோலியப் பொருட்கள் மிச்சப்படுத்தப்படுகின்றன என்று பொருளாதார நிபுணர்கள் கணிக்கிறார்கள். பெட்ரோலியப் பொருட்கள் மிச்சப்படுத்தப்படுவதால், 20 கோடி ரூபாய்க்கு அன்னிய செலவாணி மிச்சப்படுத்தப்படுகிறது என்பது மகிழ்ச்சி தரும் செய்தி.

நமது மாடுகள் கொடுக்கும் சாணத்தின் மூலம் கிடைக்கும் எரிசக்தி மூன்றரைக்கோடி டன் நிலக்கரி அல்லது ஏழு கோடி டன் விறகுக்குச் சமமானது. இது மட்டும் அல்லாது 31 கோடி டன் அளவுக்கான சாணம் நமது நிலங்களுக்கு எருவாகக் கிடைக்கிறது. மாடு அல்ல மற்றவை அதாவது கல்வியைத் தவிர மற்றவை செல்வம் அல்ல என்று சொல்லும்போது மாடு அல்ல என்று ஏன் குறிப்பிட்டான் என்று இப்போது புரிகிறது.

நமது கிராமங்களில் உழவனுக்குத் துணையாக நின்று பாலாகலம் எருவாகவும் எரிசக்தியாகவும் பயன்படுகின்ற மாடுகள் இறைச்சி கடைக்கு அனுப்பப்படுவது அறிவுக்கு உகந்த செயலல்ல என்பது இந்தப் பொங்கல் நாளில் நினைவுகூர்வது முக்கியம்.

வாழ்வில் இன்பம் பொங்குவது என்பது நாம் வாழ்வாதாரங்களை எப்படி நிர்வகிக்கிறோம் என்பதை அடிப்படையாகக் கொண்டது. மழை. காடு, நிலம், கடல், மலை, சூரியசக்தி, கால்நடை, விதைகள், பயிர்கள், மனிதர்கள், நாம் வளர்க்காத செடி கொடி, விலங்கினங்கள் இவையே இயற்கை ஆதாரங்கள். இவற்றைச் சீராகவும், சிறப்பாகவும் நிர்வகிக்கப் பழகுவது நிலைத்து நீடிக்கவல்ல வாழ்வுக்கு வழிகோலும்,

……………………

# பல்லுயிர் ஓம்புதல்

நாகரிகம் என்பது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பண்பாகக் கருதப்பட்டது. இன்று அது நடைமுறையாக, பழக்கவழக்கங்களாகப் பார்க்கப்படுகிறது. உடைகள், உணவுகள், உடல் அலங்காரங்கள், பேச்சு மொழிகள், பயணம் செய்யும் வாகனங்கள் அனைத்தும் நாகரிகம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இந்த நாகரிகம் தனி நபருக்கோ , சமூகத்துக்கோ உயர்வைத் தரவில்லை. மாறாக, பலவிதமானத் தொல்லைகளை உண்டு பண்ணுகிறது. அவற்றில் சிலவற்றை, இந்தியா ஒளிர்ந்திடச் சில சிந்தனைகள்' என்ற புத்தகத்தில் பொறியாளர். டாக்டர். தில்லைநாயகம் குறிப்பிடுகிறார்.

தூய காற்றைச் சுவாசிக்கும் உரிமையை அடிப்படை உரிமையில் சேர்க்கச் சொல்லி, உலக சுகாதார நிறுவனம் அனைத்து நாடுகளையும் வற்புறுத்தி வருகிறது. இன்றைய நாகரிகத்தால் சுத்தமான சுவாசக் காற்றை அளிக்க முடிகிறதா?

மது, குடிப்பவரின் குடும்பத்தைப் பாதிக்கிறது. குடிப்பவரின் உடல்நலம் மட்டுமே பாதிப்புக்கு ஆளாகிறது. ஆனால் புகைப்பவர்கள் 90-க்கும் மேற்பட்ட நச்சுப்பொருட்களையும், 4000க்கும் மேற்பட்ட வேதிப் பொருட்களையும் காற்றில் கலந்துவிடுகின்றனர். இதன் மூலம் மற்றவர்களுக்கு சுவாசிக்கத் தூய காற்று இல்லாத நிலை ஏற்படுகிறது. இதன் விளைவு என்ன?

மக்கள் உடனடியாக மூச்சுத்திணறல், கண் எரிச்சல், தலைவலி, குமட்டல், வாந்தி போன்ற சித்ரவதைகளுக்கு உள்ளாகிறார்கள். ஆண்டு ஒன்றுக்கு சுமார் 37,000 புகைப் பிடிக்காத அப்பாவி மக்கள் இதய நோயால் துன்புறுகிறார்கள். சுமார் ஐந்து லட்சம் பேர் புற்றுநோய் போன்றவற்றால் இறந்து போகிறார்கள். பல்லாயிரக்கணக்கான மற்ற வகை நோய்களுக்கு ஆளாகிறார்கள் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

நம் நாட்டில் இன்று 30 வயதுக்கு மேற்பட்ட பெண்களில், - பேரில் ஒருவருக்கு மார்பகப் புற்று நோய் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அப்படிப்பட்டவர்களுக்கு அறுவைச் சிகிச்சையின் முதலில் ஒரு பக்கம் மார்பகம்

நீக்கப்படும். ஒரு சிலருக்கு மறுபக்க மார்பகமும் சில காலம் கழித்து நீக்கப்படும். முடிவில் மிகுந்த மன உளைச்சலோடு துன்புறுகிறார்கள். தொண்டைப்புற்று. ரத்தப்புற்று வயிற்றுப்புற்று போன்ற பலவகைப் புற்றுகளால் எண்ணற்றோர் பாதிக்கப்படுகிறார்கள்.

இப்படியாக நாகரிகம் வளர்ந்துவிடும் பழக்கங்கள் நுகர்வோரையும் அழித்து. அருகில் இருப்போரையும் துன்பத்துக்கு ஆளாக்குகிறது. இப்படிக் கூறும் தில்லைநாயகம் பாதிக்கப்பட்டவர்களுக்கு மருத்துவமும் கூறுகிறார்.

தொண்டைப் புற்றுநோய் கண்டவரை வெறும் ஆரஞ்சுச்சாறு மட்டும் குடித்துக் குணப்படுத்திவிடலாம் என்பது ஆச்சரியம். ஆனால் உண்மை . மற்ற வகை புற்று நோயாளிகளுக்குத் திராட்சை பழத்தை மட்டுமே கொடுத்து வந்தால், நோயை விரவிலேயே குணப்படுத்த முடியும். 200 கிராம் திராட்சைப் பழத்தில் தொடங்கி இரண்டு கிலோ வரை உண்டு வந்தால் புற்று நோய் விரைவில் குணமாகும். தினமும் கேரட்டும், திராட்சையும் உண்டு வந்தால் புற்றுநோய் வராமல் தவிர்த்துக் கொள்ளலாம். வெறும் தேங்காயும். வாழைப் பழமும் மட்டுமே உணவாகக் கொடுத்து சிறிது காலத்திலேயே அனைவரையும் தொழுநோயிலிருந்து குணப்படுத்திவிடலாம்.

ஆனால் இன்று சந்தையில் கிடைக்கும் வாழைப்பழம், கேரட், திராட்சை, ஆரஞ்சு போன்றவை எந்த அளவுக்கு நோய் தீர்க்கவல்லவை?

நூற்றி ஐம்பது நாட்களில் விளையும் கேரட் கிழங்குக்கு, ஐம்பத்து ஐந்து முறை நஞ்சு தெளிக்கிறார்கள். பத்து மாதத்தில் பலன் தரும் வாழை மரத்துக்கு, நான்கு முறை ஊசி மூலம் நஞ்சை ஏற்றுகிறார்கள். நறு நாட்களில் பலன் தரும் திராட்சைக்கு, பதினேழு முறை தஞ்சு தெளிக்கிறார்கள். இது விஞ்ஞானம் என்ற பெயரில் நடைமுறையில் உள்ள நாகரிகம், விஞ்ஞானம் ஒன்றே நமது துன்பங்களுக்கு எல்லாம் விடையளிக்க முடியும்

என்ற தவறான சிந்தனை 20-ஆம் நூற்றாண்டில் மக்களுக்குப் பெரும் துயரத்தை அளித்தது.

1938-ஆம் ஆண்டு பால் முல்லர் என்ற ஜெர்மானிய விஞ்ஞானி

டீ.டீ.டி என்ற உயிர்க்கொல்லி நஞ்சைக் கண்டுபிடித்தான். போரின் போது இந்த நஞ்சை நீர் நிலைகளில் தூவினால் எதிரிகளின் முன்னேற்றத்தைத் தடுக்கலாம் என்பது அவனது திட்டம். இந்த

பிடிப்புக்காக 1948-ஆம் ஆண்டு பால் முல்லருக்கு நோபல் பரிசு வாங்கினார்கள். போர் முடிந்தபிறகு ஆள் கொல்லும் நஞ்ஞான டீ.டீ.டி.யை பூச்சி மருந்து என்ற பெயரில் விற்பனை செய்தார்கள்.

பத்தாண்டுகள் கழித்து 1958-ஆம் ஆண்டு அமெரிக்காவில் சாலையோர மரங்களின் மீது இதைத் தெளித்தபோது பறவைகள் எல்லாம் இறந்து போயின. மீன்கள் எல்லாம் நஞ்சாசிப்போயின. மீன்களை உண்ட மனிதர்கள் நோய்வாய்ப்பட்டார்கள், அமெரிக்கர் களுக்கு வசந்தம் வருவதைக் கட்டியம் கூறும் ராபின் பறவை மலடாகிப் போனது. அமெரிக்கர்களின் தேசியப் பறவை வழுக்கைத் தலைக் கழுகு மலடாகிப் போய் இனப்பெருக்கம் நின்று போனது.

பூமியின் வடதுருவம், தென் துருவங்களில் வாழும் பறவைகள் மடிந்துபோயின. குழந்தை உணவான தாய்ப் பாலிலும் டீ.டீ.டி. விஷம் காணப்பட்டது. இது குறித்து 'மௌன வசந்தம்' என்ற புத்தகத்தில், கடலியல் விஞ்ஞானி ராச்சேல் கார்சன் 1962-ஆம் ஆண்டு வெளியிட்டார். அவர் அடுத்த ஆண்டு புற்றுநோயால் இறந்து போனார். அதற்குப் பிறகும் இந்தியா அந்த நஞ்சுகளை இறக்குமதி செய்தது. இதன் விளைவாக நமது உணவிலும், சுற்றுச்சூழலிலும் நச்சுக் கலந்தது.

உணவே மருந்து என்பதுதான் நமது சித்தர்களின் வாக்கு. ஆனால், மருந்தாகக்கூடிய உணவே இன்று நஞ்சாகிக் கிடக்கிறது. நமது பழங்களையும், கொட்டைகளையும் நாடெங்கும் பரப்பவல்ல பறவைகள் மடிந்தன.

பயிர்களைப் பாதுகாப்பதில் பறவைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. பயிர்களைத் தாக்கும் பூச்சி, புழுக்களைத் தின்று தான் சில பறவைகள் உயிர்வாழ வேண்டியுள்ளது. அந்தப் பணியை மனிதர்கள் கையில் எடுப்பதால், பறவைகளும் மடிகின்றன. பயிர்களும் காக்கப்படாமல் போகின்றன.

உரம் என்ற பெயரில் மண்ணில் இடப்பட்ட ரசாயனங்கள் மண்ணில் உள்ள உயிரினத்தை அழித்ததோடு, விளைச்சலையும் வீழ்த்தியது. கூடவே நைட்ரஸ் ஆக்ஸைடை தோற்றுவித்து பூமி சூடாவதற்கும் முக்கியக் காரணியாகிறது. வெப்பத்தைத் தணிக்கவல்ல மரங்கள் வெட்டப்படுகின்றன. 2003-ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட புள்ளிவிவரக் கணக்கு, அதற்கு முந்தைய மூன்று ஆண்டுகளில் 26 ஆயிரம் சதுர கி.மீ. காடுகள் அழிக்கப்பட்டதாகச் சொல்கிறது.

மேலே கூறப்பட்ட விவரங்கள் வலியுறுத்தும் உண்மை என்ன? விஞ்ஞான வளர்ச்சி மட்டுமே முன்னேற்றத்துக்கு இட்டுச் செல்லமுடியாது. ஆன்மிகம் மட்டுமே பல்லுயிர் பேணும் பண்பை வளர்க்கும். 'கொலைத் தொழிலை விட்டொழிப்போம். மரம் நட்டு வெப்பம் தணிப்போம்' என்பதை வேத வாக்காகிச் சூளுரைப்போம்!

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

……………………..

## அய்யாச்சாமியின் கவலை

25 ஆண்டுகளுக்கு முன்பு கோவை வானொலியில் ஒரு நிகழ்ச்சி ஒளிபரப்பானது. "நாட்டில் மழை குறைந்து வருகிறது. நீர்வளம் குறைகிறது. பயிர் அறுவடை நிச்சயமற்றதாக இருக்கிறது. பூமி சூடேறுகிறது. ஆகையால், எல்லோரும் மரம் வளர்க்க வேண்டும் இதன் முதல் நிகழ்வாக ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு மரம் வளர்க்க வேண்டும்." வானொலி ஒலிபரப்பின் சாரமான

கருத்து இதுதான். இந்த ஒலிபரப்பை ஆயிரக்கணக்கானவர்கள் கேட்டார்கள். இந்தச் செய்தி அய்யாச்சாமியின் காதிலும் விழுந்தது. அது இன்று மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. குக்கூ நண்பர்கள் ஏற்பாடு செய்திருந்த நிகழ்வுக்காக சத்தியமங்கலம் காட்டுப் பகுதிக்குள் சென்றிருந்தபோது ஒருவரை சந்திக்கலாம் என்று அழைத்துச் சென்றனர்.

ஈரோடு மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியில் சத்தியமங்கலத்துக்குச் சற்றே வட கிழக்குத் திசையில் ஆறு கி.மீ. தொலைவில் ஒரு கிராமம் உள்ளது. இதன் பெயர் வேட்டுவன்புதூர். பெரிய கொடிவேறி என்ற நகர ஊராட்சியின் வரம்புக்குள் அடங்கும் கிராமம். இந்த ஊரில் காணப்படும் காட்டோடையின் இருமருங்கும் வேப்பமரங்களாகக் காட்சியளிக்கிறது. இந்தச் சோலையின் வளர்ச்சிக்கு மூல சக்தியாக விளங்கியவர் அய்யாசாமி. 76 வயதாகும் அய்யாச்சாமி, தன் 50-ஆவது வயதில் இந்தப் பணியைத் தொடங்கினார்.

அய்யாச்சாமியின் வாழ்க்கை ஆடுகளை மேய்ப்பதோடு சுழன்று கொண்டு இருந்தது. ஆடுகளை ஓடைக் கரையில் மேயவிட்ட பிறகு மர விதைச் சேகரிப்பில் இறங்குவார். சேகரித்த விதைகளை மண்ணில் குழிபோட்டு விதைகளை ஊன்றுவார்.

முன்பே போட்ட விதை முளைத்து வளர ஆரம்பிக்கும்... ஆட்டுச் சாணத்தை பொடி செய்து எருவாக இடுவார். செடிகள் மொண்டு ஊற்றிக் காப்பாற்றுவார். பின்பு செடி வளரத் தொடங்க ஆடு மாடுகளிடமிருந்து காப்பதற்காக முள் குச்சிகளைப் பக்க ஊன்றி பாதுகாப்பு அரண் உண்டு பண்ணுவார். இப்படியே ஓடை இருமருங்கிலும் அய்யாச்சாமியால் மரங்கள் வளர்க்க முடிந்திருக்கிறது.

அய்யாச்சாமி மர வளர்ப்பை ஆரம்பித்த காலத்தில், அங்கு பறவைகள் வந்து அமர்வதற்கு மரங்கள் கிடையாது. ஆனால், இன்றோ ஏராளமான பறவைகளுக்கு இவர் நட்ட மரங்கள் புகலிடமாக அமைந்துள்ளது. இதுவரையில் தனி

ஆளாக இருந்து பத்தாயிரம் மரங்களை நட்டுப் பாதுகாத்து இருக்கிறார்.

அய்யாச்சாமியின் பெருமைக்குரிய செயலைப் பாராட்டி பல விழாக்களில் நினைவுக் கேடயம் வழங்கியுள்ளார்கள். எட்டு இடங்களில் பொன்னாடை போர்த்தினார்கள் என்று சொல்லும்போது அய்யாச்சாமிக்கு மார்பு புடைக்கிறது. இருந்தாலும் புகழ் மாலைகளும் பொன்னாடைகளும் அவருக்கு மன அமைதியை அளிக்கவில்லை. "ஊர்க்காரங்க மரங்களை வெட்டிக்கொண்டு போகிறார்கள். நான் வளர்த்த குழந்தைகளை என் முன்னாலேயே வெட்டி அழித்தால், நாளைய சமுதாயம் தண்ணீருக்கும் மழைக்கும் ஏங்கித் தவிக்கும் காலம் வரும். இந்த உண்மையைத் தவறு செய்கிறவர்கள் கண்டு கொள்ள வில்லையே" என அய்யாச்சாமி கவலை கொள்கிறார்.

வெட்டுகிறவர்களை ஏன் இந்த மரங்களை வெட்டுகிறீர்கள் என்று தடுத்தால், “மரங்களை நீங்களா வளர்த்தீர்கள்? வானம் மழை பெய்தது, மரம் தானே வளர்ந்தது. ஏன் வெட்டுகிறாய் என்று நீ எப்படி கேட்கமுடியும் என்று கேட்கிறார்கள்" என்கிற திருமதி அய்யாச்சாமியின் நெருக்கடி நமக்குப் புரிகிறது.

மழை பெய்தால் மரம் வளர்கிறது என்பது மக்கள் அறிந்த உண்மை . ஆனாலும் மரங்கள் வளர்க்கப்படவில்லை. நாடு முழுவதும் அழிப்பது மட்டுமே நடக்கிறது.

……………………

## அரும்பெரும் அன்பு!

அக்னி நட்சத்திரம் எதிர்கொண்டு அழைக்கிறது. ஒவ்வொரு ஆண்டும் வெப்பம்  கூடியவண்ணம் உள்ளது. இதை அன்றாடம் உணர்கிறோம். பூமி தாயின் வெப்பம் அதிகரிப்பதால் தட்பவெப்ப நிலை மாற்றங்கள் வருங்கால வாழ்வை கேள்விக்குறியாக்குகிறது. அன்டார்டிக்காவில் உள்ள பனி மலை மேலும் மேலும் உருகிக் கடல் நோக்கிப் பாய்கிறது. எதிர்பார்த்ததை விடவும் விரைவாக அங்கு

பனி உருகுவதால், விஞ்ஞானிகள் கவலை தெரிவித்துள்ளார்கள். நடப்பது ஓர் இயற்கை நிகழ்வு, ஆனால் அதற்கு அடிப்படைக் காரணம் இயற்கை அல்ல, மனிதனின் போக்குகள்தான். இதனையும் விஞ்ஞானிகள் சுட்டிக் காட்டிவிட்டார்கள். பூமி வெப்பமாவது உடனடியாக நம்மை அச்சுறுத்தும் விஷயமாக உள்ளது.

கடல் மட்டம் உயரும்போது, கடலோர மக்களின் உணவு உற்பத்தி பாதிக்கப்படும் போது, குடி நீர்ப் பற்றாக்குறை வரும்போது, அவர்கள் என்னென்ன விபத்துக்களைச் சந்திக்க நேரிடும் என்பதைக் கற்பனை செய்வது இப்போது கடினமாக உள்ளது. ஆனால், நாம் நேரிடையாக சந்திக்கின்ற இன்னும் ஏராளமான பிரச்னைகள் நாமே தோற்றுவித்துக் கொண்டவைதான். உதாரணமாக, வேளாண்மையில் ரசாயனங்களைப் புகுத்தியதுதான் நாம் செய்த அடிப்படைத் தவறு. இதனை நாம் தொடர்ந்து பல ஆண்டுகளாக எழுதியும் பேசியும் வருகிறோம்.

வேளாண்மையில் ரசாயனங்களைப் புகுத்துவதால் ஏற்படும் தீங்குகளை நாம் தெளிவாக விளங்கிக்கொள்ளவில்லை. நாம் வாழும் நிலம் ஆயிரக்கணக்கான உயிர்களுக்கு வாழ்வாதாரம். அது போலவே, நம் நிலத்தைச் சூழ்ந்துள்ள கடலும் பல்லாயிரம் உயிர்களுக்கான

வாழ்வாதாரம் ஆகும். வாழ்வாதாரங்களைச் சிதைப்பது, நுனி மரத்தில் இருந்து அடிமரத்தை வெட்டுவது போன்ற அடி முட்டாள் தனம். கடல் நீர் ஆவியாகி மேலே போய் மேகமாக மாறுகிறது. காற்று தன் போக்கில் மேகத்தை அழைத்துச் செல்கிறது. காற்று குளிரும்போது மழையாக மாறி இறங்குகிறது. அடர்ந்த காடுகள் மழையின் வேக தணித்து, நிலம் உறிஞ்சிக்கொள்ள உதவுகிறது. நிலத்தடியில் சென்ற வெள்ளம் அருவிகளாக மாறி, மழை ஓய்ந்த பிறகும் ஆறுகளாக பெருக்கெடுக்கின்றன. ஆதலால், எந்த இடத்தில் ரசாயனத்தை கொட்டினாலும் மீண்டும் அது நம்மையே வந்தடைகிறது.

பூமி வெப்பமடைவது இவ்வகையான பாதிப்பைப் பன்மடங்குத் தீங்கானதாக மாற்றுகிறது. பூமி வெப்பமாகும் போது பருவங்கள் மாறி மழை பொழிகிறது. விதைக்க வேண்டிய நேரத்தில் மழை தவறிப் போகிறது. அறுக்க வேண்டிய நேரத்தில் வந்து அழிவைத் தருகிறது. 2008ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் பெய்த தொடர் மழையால் நாகை, திருவாரூர், தஞ்சை மாவட்டங்களில் பத்து லட்சம் ஏக்கர் நிலப்பரப்பில் அறுவடைக்குக் காத்திருந்த பயிர்கள் மூழ்கிப் போயின. நிலங்களில் கொட்டி இருந்த ரசாயன உரங்களும், பூச்சிக்கொல்லி நஞ்சுகளும், களைக்கொல்லி நஞ்சுகளும் அங்கு இங்கு எனாதபடி எங்கும் பரவி வங்கக் கடலில் சென்றடைந்தது. உழவர்கள் பயிரை இழந்தார்கள். நுகர்வோருக்கு உணவுக்கான உத்திரவாதம் அழிந்தது. 2007 ஆம் ஆண்டு மார்ச் மாதத்திலும், ஏப்ரல் மாதத்திலும் பெய்த மழையால் அறுவடைக்கு வரவிருந்த பயறு, உளுந்து சாகுபடியும் பாதிப்புக்கு ஆளானது.

இந்தத் திருக்குறள் கல்விக்கூடங்களில் அடிக்கடி உச்சரிக்கப்படுகிறது. ஆனால், உள்வாங்கப்படவில்லை . கற்பது எதற்காக? கற்றபின் அதற்குத் தக நிற்பதற்காக. கற்ற வழி நிற்கவில்லையானால் கற்றதனால் என்ன பயன்? பல்லுயிர் ஓம்பும் பண்பு நம்மிடம் அற்றுப்போனது கவலைக்குரியது. பூமியைத் தாயாகப் பாவிக்கிற தமிழர்கள் ரசாயன உரங்களையும், பூச்சிக்கொல்லி நஞ்சுகளையும், பூஞ்சானக் கொல்லி நஞ்சுகளையும், களைக்கொல்லி நஞ்சுகளையும் மண்ணில் கொட்டி, பயிர் மீது தெளித்துத் தன்னை உயர்த்திக்கொள்ள நினைப்பது சுயநலத்தின் வெளிப்பாடு.

மண்ணில் வாழும் நுண்ணுயிர்களையும் விண்ணில் பறக்கும் பறவைகளையும் நம்மை அண்டி வாழும் பசுக்களையும் ஒதுக்கி வைத்துவிட்டுத் தன்னை மட்டுமே உயர்த்திக்கொள்ள முனைந்த உழவர்கள், இன்று மரியாதை இழந்து தவிக்கிறார்கள். இழந்த

பெருமையை மீட்பதற்கு நமக்கு இருக்கும் ஒரே வழி, இயற்கையைத் தழுவிக் கொள்வதுதான். பூமி

வெப்பமாவதால் ஏற்படும் தீய விளைவுகளைத் தணிப்பதற்கு நமது ஆசைகளைக் குறைத்துக் கொள்வது ஒன்றே சரியான பாதை. வயிறு பசித்த மனிதன் பசியாறுவதற்கு உணவு கொள்கிறான். இங்கு உணவு ஒரு வலி நிவாரணியாகிறது. வெயில், மழை, பனி, காற்று இவற்றின் பாதிப்பிலிருந்து காத்துக் கொள்ள ஒரு வீட்டை முடைகிறான். வீடு அவனுக்கு வலியிலிருந்து நிவாரணம் அளிக்கிறது. குளிரில் இருந்து தன்னைக் காத்துக்கொள்ள தருவன் உடைகள் அணிகிறான். உடைகள் இங்கு வலி நிவாரணி ஆகிறது. நடந்து செல்லும் ஒருவன் தன் வலியை மறக்க காலில் அணிகிற செருப்பும், கையில் பிடிக்கிற குடையும் கூட வலி நிவாரணிதான். பயணத்துக்கு மாட்டு வண்டி, குதிரை வண்டி, சைக்கிள் வண்டியைப் பயன்படுத்துகிறான். அவை வலி நிவாரணியாக இருக்கின்றன. இந்தக் கருவிகளை இன்பத்துக்கான ஊற்றாக நினைக்கும் போதுதான் துன்பம் தொற்றிக்கொள்கிறது. இதைத்தான் அன்று புத்தர் போதித்தார். பசியை ஆற்றிக்கொள்ள வேண்டியது அடிப்படைத் தேவை, வெயில், மழை, பனி போன்ற சூழல் பாதிப்புகளில் இருந்து நம்மைக் காத்துக்கொள்வது அடிப்படைத் தேவை.

மாறாக பிறரைவிட எனக்குக் கூடுதலாக இருக்கவேண்டும் என்று, ஒவ்வொன்றிலும் கூடுதலாக அபகரித்துக்கொள்வது பேராசை. பேராசைகளில் இருந்து நம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும். கீரையில் இருந்து காய், கனி, பருப்பு வரை அனைத்துத் தேவை களையும் மரம் நிறைவு செய்ய முடியும். தொட்டில் கம்பு முதல், இறுதிப் பயணத்தின் போது பயன்படும் பாடை வரை அனைத்தையும் மரங்கள் நிறைவு செய்யும்.

இந்தப் புரிந்துணர்வை ஏராளமான மக்களுக்குக் கொண்டு செல்வது நம் எல்லோரின் பொறுப்பாகும். எங்கெங்கும் மரங்கள் நட்டு பூமித் தாய்க்குப் பச்சைப் பொன்னாடை போர்த்த நம்மைத் தயார் செய்து கொள்வோம். அதுவே நம் தாய்க்கு நாம் செய்யும் அரும்பெரும் அன்பு!

............................

## அந்த நேரத்து ஆனந்தம்

பூமித்தாயானவள் இடைவிடாது மாற்றத்துக்கு ஆளாகிவருகிறாள், இதனை 2400 ஆண்டுகளுக்கு முன்பே கவுதம புத்தர் கண்டுணர்ந்து சொன்னார். உலகம் மாறிவிடாமல் அதனைப் பிடித்து நிறுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் தோற்றுப்போயின. இன்னும் மாற்றங்கள் தொடர்கின்றன. மனித சமுதாயம் தனது நடைமுறைகளை மாற்றிக் கொள்கிறது. இதனை நாகரிகம் என்கிறோம். நம்மைச் சுற்றியுள்ள மனிதர்களிடமும் மனிதர் நீங்கிய புற இயற்கையுடனும் நாம் கொள்ளும் உறவைப் பண்பாடு என்று சொல்லுகிறோம். நாகரிகம், பண்பாடு இரண்டில் பண்பாடுதான் சிறந்தது என்பது ஆன்றோர்கள் வகுத்துள்ள நெறி, இன்றைய நாகரிக வளர்ச்சியில் உயர்பண்புகள் தேய்ந்து வருவது நமக்குக் கவலை அளிக்கிறது.

ஒரு நண்பர் இப்படிச் சொன்னார், முட்டையை இரண்டு வகையில் உடைக்கலாம். முட்டைக்கு வெளியில் இருந்து நாம் உடைக்கும்போது ஆம்லெட் போட்டுத் தின்னுகிறோம். மாறாக முட்டைக்கு உள்ளிருந்து குஞ்சு ஓட்டை உடைக்கும் போது குஞ்சு வெளியேறி கோழியாக வளர்கிறது.

ஆம்லெட் அந்த நேரத்து ஆனந்தம். ஆனால், குஞ்சு வெளியேறி கோழியாக வளரும்போது தொடர்ந்து ஏராளமான பறவைகள் கிடைக்கின்றன. பறவைகள் பூச்சி, புழுக்களைப் பிடித்து உண்ணு கின்றன. பறவைகளின் எச்சங்களில் நுண்ணுயிர்கள் மலிந்து செடி, கொடி, மரங்கள் வளர்ந்து, கனி, காய், நிழல், மழை, காற்றை வழங்குகின்றன. முட்டையில் இருந்து இப்படி அளப்பரிய பயன் வர வேண்டுமானால் தாய்க்கோழி முட்டை மேல் அமர்ந்து 21 நாட்களுக்குச் சீராக சூடு தர வேண்டும். அதற்குப் பொறுமையும் பொறுப்புணர்வும் தேவைப்படுகிறது. இவை இல்லாமையால் இன்று

பூமித்தாய் வழங்கும் வாதாரங்கள் சிதைக்கப்படுகின்றன. நாம் விரும்பிவரும் மாற்றங்கள் நம் வளர்ச்சிக்குத் துணை செல்கின்றன. நம் மீது திணிக்கப்படுகின்ற மாற்றங்கள் நமக்குத் துன்பம் இழைக்கின்றன.

நாம் விரும்பும் மாற்றங்கள் அனைத்துமே நமது வளர்ச்சிக்கோ, முன்னேற்றத்துக்கோ உதவ முடியும் என்று சொல்லமுடியாது. இதற்கு நல்ல எடுத்துக்காட்டு நமது உணவுப் பழக்கவழக்கங்கள். உடல் வளர்ச்சிக்கும் உடலின் பராமரிப்புக்கும், மாவுப்பொருள், பருப்பு. எண்ணெய், காய்கறி, பழம், கீரைகள் உட்கொள்ள வேண்டும் என்று படிக்கிறோம். கேள்விப்படுகிறோம். ஆனால் உடலுக்குத் தீங்கு பயக்கக் கூடிய இனிப்பூட்டிய பனிக்கட்டி, ரசாயனபானங்கள், காபி, தேநீர், மது, புகை இவற்றுக்கே ஏராளமான ஆதாரங்களையும் நிதியையும் செலவிடுகிறோம். தேயிலையும் காபிச் செடியும் பயிர் செய்யவே நமது மலைப்பகுதிகளை மொட்டையடிக்கிறோம், பருவ மழையை இழக்கிறோம். வனவிலங்குகளின் வாழ்விடங்களை அழிக்கிறோம். யானையும், புலியும், சிறுத்தையும் ஊருக்குள் வந்து கலாட்டா செய்வதாகக் கவலைப்படுகிறோம்.

கடந்த ஐந்து நாட்களாக ஈரோடு நகரில் சித்தார்த்தா பள்ளியில் குழந்தைகளுக்கான கலைப்பயிற்சி நடைபெற்றது. அங்கு சிறப்பான ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. அவற்றை வரைந்தவர் காது கேளாத ஒரு பெண் என்றார்கள். மிகச் சிறப்பான அந்த வண்ண ஒலியங்களை வரைந்ததற்காகப் பெரிய மனிதர்கள் கையால் அந்தப் பெண் பாராட்டுகளும், விருதுகளும் பெற்றிருக்கிறார். அந்த ஓவியங்களில் பூக்களையும், மரங்களையும், காட்டு விலங்குகளையும், நதிகளையும் வண்ணச் சித்திரங்களாகத் தீட்டியிருந்தார். இன்று நமது பூமி அப்படி இல்லையே. ஏன்? “இனிய பொழில்கள் நெடிய வயல்கள் என்னரும் பெரும் நாடு; கனியும் கிழங்கும், காய்கறிகளும் கணக்கின்றித் தரும் நாடு; நித்தம் நித்தம் கணக்கின்றித் தரும் நாடு;" என்பது பாரதியார் எழுதிய பாட்டு. இன்று நமது நாடு எப்படி

உள்ளது. ஒரு சில மாநகரங்கள், பல நகரங்கள், பலப்பல பேரூர்கள், ஆறு இலக்கம் சிற்றூர்களைக் கொண்டுள்ள நாடு இந்தியா.

ஆறு இலக்கம் சிற்றூர்களில் வாழும் மக்கள் நல்லபடி வாழ்ந்தால் தான் இந்தியா வாழ்வதாகப் பொருள்" என்று மகாத்மா காந்தி சொன்னார். நமது சிற்றூர்கள் பொலிவிழந்து கிடக்கின்றன. வறண்டு போன ஓடைகள், தூர்ந்து போன கிணறுகள், மக்கள் நடமாட்டம் குறைந்த தெருக்கள், மேய்ச்சல் குறைந்ததால் இறைச்சிக்கடைக்கு போய்விட்ட கால்நடைகள், சாகுபடியாகாத நிலங்கள், தப்பித்திருக்க புல் பூண்டுகளையும் பொசுக்குகின்ற வெயில், மழை நீர் காணாத குளம், குட்டைகள் இவையே இன்றைய கிராமப்புற இந்தியாவாகக் காட்சியளிக்கிறது.

அதாவது காந்தியை மட்டுமல்ல, காந்தியின் கொள்கைகளையும் சுட்டுக் கொன்றுவிட்டோம். நகரங்களும். மாநகரங்களும் சிற்றூர்களை விழுங்கிச் சாக்கடைகளை உமிழ்கின்றன. தொழிற் பெருக்கம் என்ற பெயரில் குப்பைமேடுகளையும், புகைக் கூண்டுகளையும் உருவாக்கிவருகிறோம்.

"உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே" என்று தொல்காப்பியம் சொல்கிறது. உணவு உற்பத்திக்கான நிலமும், நீரும் உணவு அல்லாத பயன்பாட்டுக்கு மாற்றப்படுகிறது. பட்டணத்துத் தெருக்களிலே, வயிற்றுப்பாட்டுக்காக, விலங்குகளாய்த் திரிவதுவே வாழ்க்கை என்று கற்பிக்கப்படுகிறது.

தமிழகத்தின் தலைநகரம் சென்னை. சென்னையின் குறுக்கே பாயும் ஆறு கூவம். இந்தக் கூவம் ஆற்றைக் குறுக்கே வாகனத்தில் கடக்கும் போதே மூக்கை இறுக்கமாகப் பிடித்துக்கொள்ள வேண்டியுள்ளது. கூவம் நதியைச் சுத்தம் செய்வதற்காகக் கோடி கோடியாகச் செலவழித்த பணம் எல்லாம் சாக்கடையில் கொட்டிய 'புதையல்' ஆகிப்போனது. சென்னை மாநகருக்குள் நுழைவதற்கு முன்பு கூவம் நதி குளிக்கத் தகுந்ததாகத்தான் உள்ளது. 1935-க்கு முன்பு உள்ள

படங்களில் கூவம் நதி நீர் பாய்ந்து வயல்களில் உழவர்கள் நெற்பயிர் விளைவித்ததைப் பார்க்கிறோம். இன்று என்ன நடக்கிறது?

காவிரி, தென்பெண்ணை , பாலாறு, வைகை, தாமிரபரணி, நொய்யல், பவானி, அமராவதி எல்லா நதிகளுமே கூவம் ஆகிக் கொண்டிருக்கின்றன. பட்டணங்களை விரிவுபடுத்துவதால் வளர்ச்சி காணமுடியாது. நாடெங்கும் பசுமை ஆக்குவதால் மட்டுமே அழிவிலிருந்து நம்மைக் காத்துக்கொள்ள முடியும்!

……………………..

## வானகத்தின் திட்டம்!

"உங்கள் எழுத்துக்களைப் படித்திருக்கிறேன்” என்று புன்முறுவலோடு சொல்பவர்களை அடிக்கடி பார்ப்பது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. அவர்களுக்கு எல்லாம் மகிழ்வளிக்கக்கூடிய ஒரு செய்தி. ஜூன் மாதம் இரண்டாம் நாள் கடவூர் ஊராட்சியில் அடங்கிய சுருமான்பட்டியில் வானகம்' கால்கோள் விழா நடைபெற்றது. 'வானகம்' அமைப்பு என்ன செய்ய உள்ளது? பசிப்பிணி களைவதற்கான ஆராய்ச்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வது, அதன் வழியாக பலரையும் பசிப்பிணி களையும் ஆராய்ச்சியில் ஈடுபடுத்துவது வானகத்தின் திட்டம்.

எதிர்வரும் காலத்தை அச்சுறுத்தும் வகையில் இயற்கைப் பேரிடர்களும், செயற்கை உணவுப் பஞ்சமும் பெருகிவருகின்றன. வரலாறு நெடுகத் தோன்றிய ஆன்றோர்கள் பசியின் கொடுமை பற்றியும் அதை ஆற்றுவது பற்றியும் எழுதியுள்ளார்கள். பசி பற்றி வள்ளுவன் சொல்லியுள்ளதைப் பார்ப்போம்.

வறுமையை ஒருவர் சந்திக்க வேண்டிய தேவையில்லை. 'நேற்று என்னைக் கொன்றுபோட்டதே அந்த வறுமை இன்றும் வருவது உண்டோ ?' என்ற நினைப்பே ஒருவரைப் பிழிந்து எடுத்து விடப் போதுமானது.

நெருப்பினுள் தூங்குவதுகூட சாத்தியப்படும். பசியோடு இருப்பவர் கண் மூடுவது சாத்தியப்படாது.

அத்தகைய பசியையும் தள்ளிப்போடுபவர்கள் உண்டு. அவர்களைத்தான் துறவிகள் என்றும், முனிவர்கள் என்றும் சொல்லுகிறோம். அப்படித் துறவிகள் தவம் இருந்து பசியாற்றுவது பெரிய செயல் அல்ல. மாறாகப் பசித்தவரின் பசியைத் துடைக்கும் தாளாளர்கள் பசியை பொறுத்துக் கொள்வது சுயநலம். பிறர் பசியைத் தீர்ப்பவர் வெளிப்படுத்துவது பொது நலம். பொருள் அற்றவர் பசியை ஓட்டுவதே செல்வந்தர்கள் பொருளைச் சேமிப்பதற்குச் சிறந்த இடம். ஆதலால் மனிதர்கள் மாண்புடன் வாழ பசிப்பிணி போக்கும் ஆராய்ச்சியில் தங்களை ஈடுபடுத்திக்கொள்வது முக்கியம். இத்தகைய தூண்டுகோலாய் அமைந்துள்ளது வானகம்.

நூறு மரக்கன்றுகள் நட்டு விழாவைத் தொடங்கி வைக்க நினைத்தோம். ஈஷா இயக்கத்தின் பசுமைக் கரங்கள் உதவிக்கரம் நீட்டியது. பசுமைக்கரங்கள் திட்டத்தின் மாநில ஒருங்கிணைப்பாளர் ஆனந்த் நூறு மரக்கன்றுகளைக் கொண்டுவந்து இறக்கினார். அவருடன் ஃப்ரான்ஸ் நாட்டுப் பிரதிநிதி ஜான் ஃபிலிப்பும் வந்திருந்தார், கால்கோ விழாவுக்கு வந்திருந்த மக்கள் ஒவ்வொருவரும் மரக்கன்றுகளை நடவு செய்து மூடாக்கு இட்டு நீர்வார்த்தது உற்சாகம் அளித்தது. பசுமை கரங்கள் தலைமைப் பொறுப்பில் உள்ள பொறியாளர் எத்திராஜுலுவும் ஜான் ஃபிலிப்பும் மரம் நடவு செய்து நீர் வார்த்தார்கள். எனது நெஞ்சில் நெய் வார்த்தார்கள்.

ஜூன் மாதம் ஐந்தாம் தேதி அனைத்துலக சுற்றுச்சூழல் தினம். அன்றும் நூறு மரக்கன்றுகள் நட்டால் என்ன? என்று யோசித்தோம். நிலம் தயாரித்தோம். கன்றுகள் நட்டுத் தண்ணீர் ஊற்றினோம். வேலி போடும் பணியும் தொற்றிக் கொண்டது. இப்போது நினைக்கிறோம். ஏன் இதைத் தொடர் பணி ஆக்கக்கூடாது என்று.

கோவையில், திருப்பூரில், சென்னையில், பாண்டிச்சேரியில், நாகை மாவட்டத்தில், "நான் நிலம்

தருகிறேன், நான் நிலம் தருகிறேன்" என்று மக்கள் முந்துகிறார்கள். தன்னார்வத் தொண்டர்கள் தேவைப்படுகிறார்கள். அவர்களுக்குப் பயிற்சியளிக்கும் பொறுப்பை வானகம் ஏற்கிறது.

'வேலையில்லை' என்று தொய்ந்து கிடப்போருக்கு மகிழ்வூட்டும் வேலை. தனிமை நோகடிக்கிறது என்போருக்கு குழுவாகச் செயல் படுவதற்கான வாய்ப்பு. தரிசாகக்கிடக்கும் எனது நிலத்தைப் பசுமைக் கூடாரமாக மாற்றுவேன் என்போருக்குப் பயிற்சி,

பகை மலிந்த பட்டண வாழ்க்கை கசக்கிறது என்போருக்கு ஓர் இனிமையான பொழுது போக்கு. என்னிடம் நிலம் உள்ளது, நிதி உள்ளது. மேலான காரியம் செய்ய ஆசை என்போருக்கு ஆலோசனை. இப்படி என்னையும், நண்பர்களையும், உள்ளூர் மக்களையும் ஈடுபடுத்திக் கொள்வதற்கு ஒரு கல்வி மையத்தை உருவாக்கிவிட்டோம். இங்கு வழிபடு பொருள் நீர், நெருப்பு, நிலம், காற்று மற்றும் வெளி ஆகிய ஐந்து பெரும் பூதங்கள்தான். இன்று இந்த பூதங்களும் சமநிலை இழந்து கிடக்கின்றன.

நெருப்பு கொதிக்கிறது. வெளி விரிகிறது. அது மேலும் மாசுபடுகிறது. காற்றும் மாசுபட்டு நோய் மிஞ்சுகிறது.

கை நிலம் சுருங்குகிறது. வேளாண்மை அல்லாத பயன் பாட்டுக்கு மாற்றப்படுகிறது. வேளாண்மை நடைபெறுவதற்கு நல்ல நிலம், போதிய தண்ணீர், மின்சக்தி, மனித உழைப்பு அனைத்தும் தேவைப்படுகிறது. நிதிகூடத் தேவைப்படுகிறது. எங்கு இவை எல்லாம் கிடைக்கிறதோ, அங்கு உணவு அல்லாதவை உற்பத்தி செய்யப்

படுகின்றன. பூவும், புகையிலையும், காட்டாமணக்கும், சவுக்கும், தைலமும் உற்பத்தி செய்யப்படுகின்றன. தென்னையும் வாழையும்கூட உற்பத்தி செய்யப்படுகின்றன. உண்பதற்காக அல்ல. ஆலைத் தொழிலுக்கு மூலப்பொருளாக.

நீர் குறைந்து நிலம் சுருங்கி, சக்தி இன்றி, நிதியின்றி, உழைப்பு ஒன்றையே மூலதனமாகக் கொண்டவர்கள் சோளம், கம்பு, வரகு, கேழ்வரகு, குதிரைவாலி, சாமை, தினை, காடைக்கண்ணி போன்ற சத்து மிகு தானியங்களைப் பயிர் செய்கிறார்கள். இவர்கள் பட்டபாட்டுக்குப் பலன் கிடைப்பதற்குப் பருவகால மாறுபாடுகள் இடையூறாக உள்ளன. இவர்கள் உற்பத்தி செய்வதை விற்றுப் பணம் பார்ப்பதுவும் முயல் கொம்பாக உள்ளது. இத்தகைய இடையூறுகளைக் களைவதற்கு பரந்துபட்ட வேலைகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது. கூட்டுச் செயல்பாடு தேவைப்படுகிறது. ஆன்மிகமும், அறிவியலும், சமூகவியலும் கைகோர்க்க வேண்டியுள்ளது. பசுமைக் குடை ஒன்றே மழையை மண்ணுக்குள் அனுப்பும். மனிதர்க்குப் புகலிடம் அளிக்கும்!

……………….

## கரி வார்ப்பட்டை

கோடைப் பருவம் முடிவுக்கு வந்தது. பருவ மழை பெய்யப் போகிறது என்று மக்கள் எதிர்பார்த்தார்கள். மழை ஒரு மாதமாகியும் வரவில்லை. கவலைப்படத் தேவையில்லை. உணவுத் தட்டுப்பாடு வராது என்று அமைச்சர் ஆறுதல் வார்த்தை சொன்னார். சென்ற ஆண்டும் இப்படித்தான் இருந்தது. பருவமழை தாமதமாக வந்தது. இந்த வருடமும் தாமதமாக வரக்கூடும் என்பது அமைச்சர் கருத்து.

மழையும் வரத்தான் செய்தது. அசாம் மாநிலம் வெள்ளத்தில் மிதக்கிறது. மும்பை சாலைகளில் மோட்டார் கார்களை வெள்ள நீர் அடித்துப் போகிறது. கர்நாடகத்தில் மழை 24 மணி நேரத்தில் 108 மில்லி மீட்டர் கொட்டியதால் 48 வீடுகள் இடிந்து வீழ்ந்தன. 30 வீடுகளுக்குச் சேதம் ஏற்பட்டது. பள்ளிகளுக்கு விடுமுறை விட்டார்கள். தமிழ்நாட்டில் மட்டும் மழையைக் காணோம். மேட்டூர் அணைக்கு நீர் கொடுக்கும் பரப்பிலும் மழையில்லை. வானிலை ஆராய்ச்சி நிலையம்கூட, 'இன்னும் 24 மணி நேரத்தில் தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி மாநிலங்களில் மழை பெய்யும்' என்று

சோதிடம் கூறியது. ஆனாலும் வானம் அசைந்து கொடுக்கவில்லை.

இனி தமிழ்நாட்டில் மழை வந்தாலும் மேட்டூர் அணை (120 அடி) இப்போது நிரம்பப்போவது இல்லை. அப்படி நிரம்பினாலும், உழவர்கள் கார் பருவ நெல் சாகுபடி செய்யப்போவதில்லை ,

ஒருவேளை அப்படிச் செய்தால், புரட்டாசி மாதத்தில் அறுவடை நேரத்தில் மழை பெய்வதால் பெரும் பாதிப்பு இருக்கும். கொள்முதல் நிலையத்தில் நெல்லில் ஈரப்பதம் அதிகமாக உள்ளது என்பார்கள். சூரியன் தலைகாட்டாது, மேகம் மூட்டம் போடும். சாக்குகள் இருந்தபடியே நெல் முளைக்கும். இப்படி ஒவ்வொரு வேலையும் தடைபட்டுப் போகிறது. ஆமாம், ஏன் மழையானது பருவத்தில் பெய்யாமல் தவறிப் போகிறது? பூமியில் தட்பவெப்ப நிலையில் மாற்றம் எற்படுவதால் பருவமழை தவறிப் பெய்கிறது. பருவ மழை தவறுவதற்கு பூமி சூடாவதே காரணம். பூமி சூடாவதற்குப் பல காரணங்களை விஞ்ஞானிகள் முன் வைக்கிறார்கள்.

ஆலைகள் பெருகியதால் தொழிற்சாலை கக்கும் புகை (CO) பூமிக்கு சூடேற்றுகிறது. ஆலைகளும், வாகனங்களும் கக்குகின்ற புகை, காற்று மண்டலத்தில் உள்ள கரியோடும், பனியோடும், அமிலத்தோடும் கலந்து ஒரு கரி வளையத்தைத் தோற்றுவிக்கிறது. இதைக் கரி வார்ப்பட்டை (carbon belt) என்று அழைக்கிறார்கள். இந்த கார்பன் பெல்ட பூமிக்கு வெளியே 15 முதல் 20 கி.மீ. தொலைவில் ஏற்பட்டுள்ளது, 'கார்பன் பெல்ட்டுக்கும். பூமி சூடாவதற்கும் உள்ள தொடர்பு என்ன?' என்ற கேள்வி எழுகிறது. சூரியனில் இருந்து புறப்பட்டு வரும் வெளிச்சம் பூமிக்கு வருவதை கார்பன் பெல்ட் அனுமதிக்கிறது. பூமிக்கு வந்த ஒளி வெப்பமாக மாறி நெருப்பாகி வானத்துக்கு மீளும்போது அதைத் தடுக்கிறது. அடைபட்ட வெப்பக்காற்று அண்ட வெளிக்குச் சூடேற்றுகிறது.

காடுகள் அழிவதுகூட பூமி சூடாவதற்கு ஒரு காரணமாகிறது. மரம், செடி, கொடிகள் உணவு

சமைப்பதில் (ஒளிச்சேர்க்கை) ஈடுபடும்போது கரியை உள்வாங்குகின்றன. சூரியஒளி நிலத்தைத் தொடுவதைத் தடுத்துவிடுகின்றன. சாலைகள் போடவும், விடுதிகள், வீடு கட்டவும் காடுகள் அழிக்கப்படுகின்றன. ஆங்கிலேயர்கள், இந்தியாவை ஆண்ட போது தேயிலை, காபி, ரப்பர் தோட்டம் போடுவதற்காக, ரபில் பாதை அமைப்பதற்காக காடுகளை அழித்தார்கள். நாமோ துணி ஆலை களுக்கும், காகித ஆலைகளுக்கும் தேவையான கூழ் மரங்களை வளர்ப்பதற்காக இயற்கைக் காடுகளை அழித்தோம்.

இவை அனைத்துக்கும் பெரிய கேடு நாம் செய்யும் வேளாண் முறையினால் வருகிறது. நிலத்தை உழவு செய்யும் டிராக்டரும், அறுவடைக் கருவிகளும் புகையைக் கக்குகின்றன. இடு பொருள்களைச் சுமந்து வரும்போதும், விளைபொருள்களைச் சுமந்து செல்லும்போதும் லாரிகள் புகையைக் கக்குகின்றன. எந்திரங்களும், ரசாயன உரம், பூச்சிக் கொல்லி, விதை உற்பத்தி ஆலைகளும் புகையைக் கக்குகின்றன. இவையல்லாமல் நீர் தேங்கியுள்ள சேற்று நிலம் வெளியேற்றும் மீதேன் காற்று, காற்று வெளிக்கு வெப்பம் ஏற்றுகிறது. அடுத்து நைட்ரஜன் காற்றை வெளிவிடும் ரசாயன உரங்கள் நைட்ரஜன் காற்றை

வெளிவிடுகின்றன. இந்த நைட்ரஜன் காற்று, கரி அமிலம் போல (CO) 21 மடங்கு அதிகமாக பூமியைச் சூடாக்குகிறது.

பூமி சூடாவதால் தட்பவெப்பநிலை மாற்றமடைகிறது. தவறிப் போவது தட்ப வெப்ப நிலை மாற்றம் விளைவுதான். பேரழிவு கடல் மட்டம் உயர்வதில் உள்ளது. தென் துருவம், வட துருவங்களில் உள்ள பனி மலைகள் உருகி ஓடிக் கடல் மட்டம் உயர்கிறது. இதனால் கடல் மட்டம் - பூமிக்குள் நுழையும் ஆபத்து உள்ளது. தென்னிந்திய நதிகளுக்கும் வட இந்திய நதிகளுக்கும் ஒரு பெரிய வேறுபாடு உண்டு தென்னிந்தியாவில் மலைகளில் மழை பொழிவதால் ஆறுகளில் தண்ணீர் ஓடுகிறது.

வட இந்தியாவில் இமயமலையில் உள்ள பனிப்பாளங்கள் உருகி நீராக மாறி நதிகளில் (முக்கியமாக கங்கையில்) ஒடிவருகிறது. குளிர் காலங்களில் உறையும் பனிப்பாளங்கள் கோடைக் காலத்தில் உருகி வெள்ளமாக நதிகளில் பாயும்.

இன்று பூமி சூடாவதால், குளிர் காலத்திலேயே இமயமலைப் பனி உருகி ஓடி வருகிறது. இதனால் இமயமலைப் பனி முற்றிலும் கரைந்து போகவும், அதனால் கங்கை பாயும் மாநிலங்கள் வறண்டு போகவும் ஆபத்து உள்ளது. இதனால் உணவுப் பஞ்சமும், பட்டினிச் சாவும் அதிகரிப்பதற்கான வாய்ப்பு கூடிக்கொண்டே வருகிறது. இதற்கு நாம் என்ன செய்ய முடியும்?

பூமிக்கு சூடேறவல்ல வெப்பக் காற்றுகளை வெளியேற்றுவதில் தொழில்வளம் பெருக்கிய பணக்கார நாடுகள்தான் முன்னிலையில் உள்ளன. ஆனால், பாதிப்புகள் அந்த நாடுகளுக்குக் குறைவு. காரணம் அந்த நாடுகள் குளிர் மிகுந்த நிலப் பகுதிகளில் உள்ளன. ஆனாலும் உலகம் இன்று விழித்துக் கொண்டுள்ளது. வெப்பக் காற்றை வெளியேற்றுவதை அனைவரும் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று ஒன்றுகூடி முடிவு எடுக்கின்றன.

நாமும் ஒரு முடிவுக்கு வரவேண்டும். "என்னை அறிந்தோ , அறியாமலோ பூமி சூடாவதற்குத் துணை போகமாட்டேன்" இப்படி

முடிவெடுப்போம். எடுத்த முடிவில் உறுதியாக நிற்போம்

…………………

# பொட்டல் நிலத்தில் பசுமை

ஜூலை மாதம் 25, 26 தேதிகளில் மத்தியப் பிரதேச மாநிலத்தின் தலைநகர் போபாலில் இருந்தேன். இரண்டாம் நாள் காலை 100 கி.மீ. தொலைவுக்கு அப்பால் உள்ள கிராமத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்குதான் ஓர் அற்புதத்தைக் காணமுடிந்தது.

இன்று எங்கு பார்த்தாலும் 'பற்றாக்குறை' என்ற கூக்குரலைப் பார்க்கமுடிகிறது. தண்ணீர் பற்றாக்குறை, மின்சக்தி பற்றாக்குறை, ஆள்பற்றாக்குறை, தீவனப் பற்றாக்குறை, மரப் பற்றாக்குறை, உணவுப் பற்றாக்குறை, கால்நடைப் பற்றாக்குறை என அனைத்துப் பற்றாக்குறைகளுக்கும் தீர்வு காணப்பட்டது போன்றதொரு காட்சியை மத்தியப் பிரதேசக் காட்டில் காண முடிந்தது.

ஆண்டிற்கு 400 மில்லி மழைப் பொழிவு உள்ள பகுதி அது. மேடு பள்ளங்கள் மிகுந்த நிலப்பரப்பு. நிலச்சரிலின் குறுக்காக பள்ளம் தோண்டி மேட்டுவரப்பு அமைத்திருந்தார்கள். தஞ்சாவூர் கோவிலைச் சுற்றி அகழியும், மதில் சுவரும் அமைத்திருந்தார்களே, அது போன்று மண்ணாலேயே அதுவும் அகழி தோண்டிய மண்ணைக் கொண்டே மதில் மேட்டு வரப்பு அமைத்திருந்தார்கள். சம உயரம் பார்த்துத் துண்டு துண்டு வரப்புகள் அமைத்தார்கள். வாய்க்காலும் நெட்டை வாய்க்கால் இல்லாமல் துண்டு துண்டாகத் தடுத்திருந்தார்கள். இதன் விளைவாக நிலப்பரப்பில் ஓடி மறைந்த மழை நீர், நிலத்திற்குள் புகுந்து தூய ஊற்று நீராக எழுந்து குளம் குட்டையாகச் சேமிக்கப்பட்டுவிட்டது.

தண்ணீர் சேமிக்கப்பட்டதும், எங்கெங்கும் புல் முளைத்து வளரத் தொடங்கியது. புல் வளர்ந்ததும் பசு வந்துவிட்டது. உழவர்கள் வீட்டில் தீவனம் இல்லாமையால் மெலிந்து போய் எழும்பும் தோலுமாய் காணப்பட்ட பசுக்களுக்கு ஒரு கோசாலை அமைத்தார்கள். பசுக்களுக்கு மேய்ச்சல் கிடைத்தது. பசுக்களின் கழிவு நிலத்திற்கு எருவாக பசுக்கள் மத்தியில் வளரும் காளை மாடுகள் கலப்பை சக்திகளாக மாறின. தரிசாக இருந்த நிலத்தில் தற்சமயம் சோளமும் பிற செடிகளும் பயிராகியுள்ளன.

இத்தகைய பணிகளுக்கு மூலகாரணமானவர்கள் இரண்டு பேர். ஒருவர் தீபக் கச்டே. இவர், இயற்கை வேளாண்மையில் கரை கண்ட கணிதப் பேராசான் சிரிபோத தபோல்கரின் சீடர். மற்றவர் காவல்துல கண்காணிப்பாளராக இருந்து விருப்ப ஓய்வில் வெளியே

வந்தவர் இவர் பெயர் ராஜேஷ். ராஜேஷ் காவல் துறையில் பணிபுரிந்தபோதே சிறிய அளவில் அங்கும் இங்கும் மழைநீர் அறுவடை செய்து வெற்றி கண்டவர்.

ராஜேஷ் பணியில் சேமித்த பணத்தைக்கொண்டு 280 ஏக்கர் பொட்டல் தரையை வாங்கினார். மண் அரிப்பினால் பாழ்பட்டுக்கிடந்த நிலத்தைப் புதுப்பித்தார். அக்கம்பக்கம் உள்ள ஊர் மக்கள் ஒத்துழைப்புடன் இதைச் செய்து முடித்தார். ஊர் மக்களையே தொழில்நுட்பம் அறிந்த நிபுணர்களாகச் செயல்படவைத்தது ராஜேஷின் தனிச்சிறப்பு.

மழை நீர் நிலத்திற்குக் கீழே இறங்கியதும் வெட்டுப்பட்டு கட்டையாக இருந்த மரங்கள் துளிர்த்து வளர்ந்தன. இவ்வளவு செழிப்பையும் ஒன்றரை ஆண்டுகளில் சாதிக்க முடிந்துள்ளது. அடுத்த கட்டமாக இப்பணிகளை கிராமத்து மக்கள் மத்தியில் கொண்டு போயுள்ளார்கள். கிராமத்து மக்கள் கால்நடைக் கழிவுகளையும், மனிதன் கழிவுகளையும் சாண எரிக்காற்றுக் கலனிற்குள் செலுத்துகிறார்கள். சாணம் எரியும்போது அடுப்பு எரிக்க எரியும் காற்று (மீத்தேன்) கிடைக்கிறது. விளக்கு எரிக்க மின் சக்தியும் கிடைக்கிறது.

மக்களுக்கு வேலைவாய்ப்பு உயர்கிறது. நீர்த்தேக்கங்களில் ஆண்டு முழுவதும் தண்ணீர் நிற்கிறது. இது கொண்டு ஆண்டு தோறும் மூன்று பருவங்கள் பயிர் செய்ய முடியும் என்கிறார் ராஜேஷ். அனைத்துத் தேவைகளுக்கும் அரசாங்கத்தின் உதவியை நாடி இருந்த மக்களை எதற்கும் எவரையும் எதிர்பார்க்காத மக்களாக்கி இருக்கிறார்கள் ராஜேஷும் தீபக்கும்.

மதிநுட்பம் கூடிய தொழில் திட்டம் மக்களை அனைத்துத்தளைகளில் இருந்தும் விடுதலை அளிக்கும் என்பதற்கு இது சிறந்த எடுத்துக்காட்டு. தெற்கு சற்றும் குறையாத இன்னொரு எடுத்துக்காட்டை மராட்டிய மாநிலத்தில் வார்தா பகுதியில் பார்க்க நேர்ந்தது. பெரிய அளவில்

உழவர் தற்கொலை நிகழும் விதர்பா வட்டாரத்திற்கு உள்ளடக்கிய ஒரு பகுதியில் இந்த எடுத்துக்காட்டு சாட்சியாக அமைகிறது. நிரஞ்சனா, அசோக்பென் இருவரும் இங்கு மூலகர்த்தாக்கள், இங்கு அதிகப்படியான கல்வி இல்லாத கிராமத்து பெண்களுக்கு உயர வரப்பு மற்றும் சம உயர வரப்பு அமைக்க பயிற்சி அளித்தார்கள். நாட்டு இலந்தை மரத்தில் சீமை இலந்தை மரத்தை ஒட்டு கட்டுவதற்கு பயிற்சி கொடுத்தார்கள்.

ஒவ்வொருவருடைய நிலத்திலும் 35 வகையான பயிர்களை வளர்க்கப் பயிற்றுவித்தார்கள். அதில் மரப் பயிர்களும், தீவனச் செடிகளும், பல வகையான உணவுப் பயிர்களும் இருந்தன. தானியங்கள், பருப்பு, எண்ணெய் வித்து. பருத்தி, காய்கறி போன்ற செடி, கொடி, மரங்கள் இருந்தன. மக்கள் விதைக்காமலே வளரும் உணவுத் தீவனம், மூலிகைச் செடிகளும் பலன் தந்தன, மழை அதிகமாக இருக்கும் பருவத்தில் விளையக்கூடிய பயிர்களும் இருந்தன. மழை பொய்த்துப்போகும் பருவத்தில் விளையக்கூடிய செடிகளும் இருந்தன.

பலவிதமான பயிர்களும் வேறு வேறு வயதில் விளைச்சல் தருவதால் வேலைகள் பரவலாக்கப்பட்டன. வருவாய் பல இனங்களில் இருந்து கிடைக்கப்பெற்றது. சந்தை சூதாட்டத்தாலும் இவர்கள் சங்கடப்பட வில்லை. அணைக்கட்டில் இருந்து வரும் தண்ணீரோ, அரசாங்கம் கொடுக்கும் மின்சாரமோ இவர்களை எட்டிப் பார்க்கவில்லை. இருந்தாலும் இவர்கள் ஒராண்டுக்குத் தேவையான உணவைச் சேமிப்பதோடு அடுத்த ஆண்டிற்கான விதைகளை மிச்சப்படுத்திய பின்பும் மீதமுள்ளவற்றை விற்று ஒரு ஏக்கருக்கு ஏழாயிரம் ரூபாய் வருமானம் பெறுகிறார்கள்.

தமிழ்நாட்டில் கூட வறட்சி பாதிக்கும் பல மாவட்டங்களில் ஆண்டுக்கு 300 மில்லி மழை பெறுவது முயல் கொம்பாக உள்ளது. மக்களுக்கு நல்லது செய்ய விருப்பம் உள்ளவர்கள் இந்தப் பாதைகளை கையில் எடுப்பதால் கனவு நனவாகும் வாய்ப்பு உள்ளது.

உலகம் முழுவதும் வாணிப வளர்ச்சியே வளர்ச்சி என்று கருதியதால் மலைகளையும், காடுகளையும் வாணிபப் பயிர்கள் ஆக்கிரமித்துக் கொண்டன. மரங்களை வெட்டிச் சாலைகளை விரிப்பதும், கிராமங்களை ஒழித்து பட்டணங்களை விரிப்பதும், பூமிக்கு வெப்பம் ஏற்றின. விரிவடைந்த சாலைகளில் ஓடும் வாகனங்களும், தொழில் ஆலைகள் கக்கும் புகையும், பயிர் நிலங்களில் கொட்டப்படும் ரசாயன உரங்களும் பசுமைக் குடில் காற்றை வெளியேற்றுவதால் தட்பவெப்ப நிலையில் மாற்றம் ஏற்படுகிறது. பருவமழை தவறிப்போகிறது.

மேலே குறிப்பிட்ட நிலைமைகளை இந்தியாவிலும் சீனாவிலும் பார்க்கிறோம். சீன நாட்டில் வெள்ளப்பெருக்கால் ஆறுகள் ஊருக்குள் புகுந்து வீடுகள் நீரில் மூழ்குகின்றன. அங்கு மக்கள் பாதுகாப்பான இடங்களுக்குக் கடத்தப்படுவதை தொலைக்காட்சியில் பார்க்கிறோம். இந்தியாவில் பீகார் மாநிலத்தில் இதே போன்றதொரு காட்சி நிலவுகின்ற செய்தியையும் தொலைக்காட்சிப் பெட்டி வழியாக அறிகிறோம். இத்தகைய சூழ்நிலையில்தான் கட்டுரையின் முன்பகுதியில் உள்ள இரண்டு உதாரணங்களும் எழுந்து நிற்கின்றன.

……………………

## இதுதான் வளர்ச்சி திட்டம்!

ஆகஸ்ட் மாதம் 15 ஆம் நாள் திருப்பூர் மாநகரில் இருந்தேன். அரசு மேல் நிலைப் பள்ளியில் தேசியக் கொடியை ஏற்றிவைத்து ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு உரை நிகழ்த்தும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கூடவே ஒரு மரக்கன்றையும் நட்டுவைத்து பேரளவு மரம் நடும் பணியைத் தொடங்கிவைக்கும் வாய்ப்பும், அடுத்து ஊத்துக்குளி என்ற ஊரில் உள்ள பெண்கள் பள்ளி வளாகத்தில் மரம் வளர்ப்பு குறித்து மாணவர்களும் பெற்றோருக்கும், ஆசிரியருக்கும் உரை நிகழ்த்தும் விழா. அதன் தொடர்ச்சியாக ஓர் அரங்கத்தில்

கூடி இருந்த உழவர்களுக்கு இயற்கை உழவாண்மை குறித்து உரை நிகழ்த்தும் வாய்ப்பும் கிடைத்தது. அந்த ஊரில் பசுஞ்சட்டை அணிந்த இளைஞர் படை இருப்பது உற்சாகம் அளித்தது.

திருப்பூர் மாநகரம் சிலிர்த்து எழுவது என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. மாளிகைகளாலும், சாலைகளாலும், வாகனங்களாலும் மாசுபட்டுவிட்ட திருப்பூர் மாநகரத்தை பசுஞ்சோலையாக மாற்றிக் காட்டுவோம் என்று புறப்பட்டுள்ள மக்களை மனமாற வாழ்த்தினேன்.

பெருவிழாவில் என்னால் கலந்துகொள்ள முடியவில்லை. ஆனால், அன்று நான் கலந்து கொண்டதும் ஒரு முக்கியமான நிகழ்வுதான். மத்தியப் பிரதேச மாநிலத்தில் உள்ள காடுகளில் அந்த அமர்வு இருந்தது. காடுகள் அழிந்தாலும், கட்டுப்பாடின்றி ஆடு, மாடுகள் திரிந்ததாலும் வறண்டு கிடந்த 300 ஏக்கர் நிலத்தை ஒருவர் மாற்றிக்காட்டி இருந்தார்.

சுற்று வட்டார உழவர்களைக் கொண்டே வாய்க்காலும் மதில் சுவருமாகப் பள்ளங்கள் தோண்டி, வரப்பு அமைத்து நீரோட்டத்தைத் தடுத்து இருந்தார். வாய்க்கால்களின் குறுக்கே தடுப்பணைகள் அமைத்து, ஏரி, குளங்களை உருவாக்கியிருந்தார். ஓடுகின்ற தண்ணீரை நிறுத்தியதால், தண்ணீர் நிலத்தடியில் இறங்கியது. காய் புல்லும், பூண்டும், புதர்ச்செடிகளும் மறுவாழ்வு பெற்றன. விளிம்பில் இருந்த அடிமரங்கள் கிளை பரப்பின. சரியான இல்லாமல் எலும்பும் தோலுமாக மெலிந்திருந்த பசுக்களும் மாடுகளும், ஆடுகளும் உள்ளே வரவழைக்கப்பட்டுப் பட்டன. கால்நடைகளின் எரு நிலத்துக்கு வளமூட்ட கால்நடைகளின் சக்தி நிலத்தை உழுவதற்குப் பயன்பட்டது. விதைகள் விதைக்கப்பட்டு, பயிர்கள் தடைமுறை இன்றிப் காய்த்தன.

இத்தகைய மாற்றத்தை உருவாக்கியவர் ஒரு காவல் துறைக் கண்காணிப்பாளர். இளமையிலேயே விருப்ப விடுப்பில் பணியைவிட்டு வெளியேறிய ராஜேஷ் குப்தா தனது நண்பர்களுடன் இணைந்து இன்று மாபெரும்

வெற்றியை ஈட்டியுள்ளார். அவர் அதோடும் நிற்கவில்லை. முதலமைச்சரையும் நிலத்துக்கே கொண்டுவந்து காட்டியுள்ளார். நீர் சேமிக்கப்பட்ட காட்சியையும், இயற்கை வேளாண்மை குறித்தும் வந்திருந்து பிரதிநிதிகள் ஆற்றிய உரைகளைக் கேட்ட முதல்வர், காவல் துறைக் கண்காணிப்பாளருக்கு நன்றி தெரிவித்தார்.

"இதுவரையில் வளர்ச்சித் திட்டம் என்றால், குடிநீர் ஏற்பாடு செய்வது, மின்சாரம் வழங்குவது, சாலை போடுவது, உற்பத்தியாளருக்கு உர மானியம் கொடுப்பது மட்டும்தான் என்று நினைத்திருந்தோம். இன்று மழை நீரைச் சேமிப்பது, மரங்களை வளர்ப்பது. ஆடு மாடுகளைப் பராமரிப்பது, இயற்கை வேளாண்மையைக் கையில் எடுப்பது போன்றவைதான் வளர்ச்சிக்கான அடிப்படைகள் என்பதை எனக்குக் கற்பித்து இருக்கிறீர்கள். உங்களுக்கு நன்றி" என்று அறிவித்தார்.

ராஜேஷ் குப்தா இத்தோடு தனது பணியை நிறுத்திக்கொள்ளவில்லை. ஒவ்வோர் ஊரிலும் இந்தப் பணியை நிறைவேற்றுவார். கூடவே "எல்லோருக்கும் எரி சாணக் கிணறு அமைத்துக் கொடுப்போம். எரிசாணக் கிணற்றைப் பயன்படுத்தி மின்சக்தி உற்பத்தி செய்வோம். ஆண்டுக்கு 400 மில்லி மட்டுமே மழை பெய்தாலும் மூன்று முறை பயிர் வளர்ப்போம். கிராமத்து மக்களின் வேலைவாய்ப்பை உயர்த்தி, வருவாயையும் உயர்த்தி, வாழ்நிலையை மேம்படுத்துவோம். ஒவ்வொரு கிராமமும் அரசாங்கத்தை மட்டுமே சார்ந்திருப்பதில் இருந்து விடுதலை பெறுவதற்கு வழிவகை செய்வோம். இன்னும் சில ஆண்டுகளில் மாவட்டம் மாவட்டமாக மக்களுக்கு விடுதலை வாங்கித் தருவோம்" என்று அவரும் அவரது குழுவினரும் சூளுரைத்தார்கள்.

விழாவின் இறுதியில், “எங்களுக்குக் கொஞ்சம் இடம் கொடுங்கள், நீருக்கு பக்கமாகக் கொஞ்சம் நிலம் ஒதுக்குங்கள். நாங்கள் அறிந்தவற்றை சோதித்துப்பார்க்க வாய்ப்பு அளியுங்கள்" என்று கேட்டேன்.

இப்படிப் புதிய சிந்தனையோடு வருபவர்களுக்காகவே 100 ஏக்கர் நிலம் ஒதுக்கி இருப்பதாகக் கூறிய அவர்கள், "நம்மாழ்வார் எப்போது வேண்டுமானாலும் வரலாம். எல்லா இடங்களிலும் அவரது கனவுகளுக்கு வடிவம் கொடுக்கலாம்" என்று சொன்னார்கள்,

நம் இயக்கத்துக்கு இப்படி ஒரு பார்வை கிடைத்திருப்பது நமது பணிக்கு விரைவும், விவேகமும் அளிக்க முடியும்.

ஆண்டு தோறும் பெய்ய வேண்டிய 900 மில்லி மழையில் 29 விழுக்காடு குறைந்துவிட்டது. அதனால் 30 விழுக்காடு உணவு உற்பத்தி பாதிக்கப்படும். மக்கள் வேலைவாய்ப்பை இழப்பார்கள். குடிநீர்த் தட்டுப்பாடு வரும் என்றெல்லாம் தேசிய அளவில் இன்று பேசப்படுகிறது. இத்தகைய ஒரு தருணத்தில் 400 மில்லி மழை நீர் கொண்டு மூன்று பயிர் அறுவடை செய்வேன் என்று கூறும் முன்னாள் காவல்துறைக் கண்காணிப்பாளர், இன்னொன்றையும் கூறுகிறார். "மழை நீர் குறைவு என்பது பெரிய பாதிப்பில்லை. சீரான நீர் நிர்வாகம் இல்லை என்பதுதான் பெரிய குறைபாடு" என்பதே அவரது முடிவு. நமது முடிவும் அதுவே.

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்

என்னுடையர் எனும் இலர்.

......................…

## பேரியக்கம் தேவைப்படுகிறது!

இயற்கைக்கு மனிதன் கடிவாளம் போடமுடியாது. இயற்கை மீது மனிதன் குதிரை சவாரி செய்ய முடியாது. அப்படிச் செய்ய முயன்றாள் இயற்கை திருப்பித் தாக்கும். இந்த ஆண்டு 28 விழுக்காடு மழை குறைவு. அதனால் 30 விழுக்காடு உணவுப் பற்றாக்குறை எதிர்பார்க்கப்படுகிறது. அதனால், உணவு தானியத்தை இறக்குமல் செய்யப்போகிறேன் என்று உணவு அமைச்சர் செய்தி

வெளியிட்டார். ஆனால், நமக்கு அண்மையில் உள்ள ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் 100 ஆண்டு காணாத வெள்ளம் மக்களையும், உடைமைகளையும் கடலில் கொண்டுபோய்ச் சேர்த்துள்ளது.

ஊர்கள் எங்கெங்கும் தீவுகளாகக் காட்சியளிக்கின்றன. வீடுகள் மிதக்கும் படகுகளாகத் தோன்றுகின்றன. வீதிகளுக்கும், ஆறுகளுக்கும் வேறுபாடு மறைந்துவிட்டது. கடலோரப் பட்டினமான விஜய நகரம் கரைந்து விடுமோ என்று பயப்படும் மக்கள் நகரத்தை விட்டு வெளியேறுகிறார்கள். இயற்கைப் பேரழிவுகளை பூமி தன் வாழ்நாளான 460 கோடி ஆண்டுகளில் பலமுறை பார்த்திருக்கிறது. ஆனால், அவற்றுக்கும், இன்று நடப்பதற்கும் ஒரு பெரிய வேறுபாடு உண்டு. இன்றையப் பேரழிவுக்கு மனிதச் செயல்பாடுகளே காரணம். இதனை 20 ஆண்டுகளாக 170 நாடுகள் ஏற்படுத்தியுள்ள விஞ்ஞானிகள் குழு எச்சரித்து வந்துள்ளது.

இந்திய நாட்டு நடுவண் அரசோ, மாநில அரசுகளோ தங்களைக் குற்றஞ்சாட்டுவதாகக் கருதத் தேவையில்லை. அப்படிப் பார்ப்பது உண்மையை உணர்ந்து உரிய நடவடிக்கை எடுப்பதற்கு முட்டுக் கட்டையாய் அமைந்துவிடும். 2004ஆம் ஆண்டு தொடங்கி இன்று வரை சுமத்திரா தீவை நிலநடுக்கம் உலுக்கி எடுத்து உயிர்ப் பலிகொள்கிறது. அண்மையில் இப்படிப்பட்ட ஒரு நிலநடுக்கம் அஸாம் மாநிலத்திலும் அதிர்வை ஏற்படுத்தியது. பிலிப்பைன்ஸ் நாடு 7,000 தீவுகளைக் கொண்டது.

அண்மையில் தாக்கிய புயல் அந்த நாட்டின் வடபகுதியைச் சூறையாடி ஆயிரக்கணக்கில் பலிகொண்டது. அமெரிக்காவில் வெளிப்பட்ட ஆழிப்பேரலை (சுனாமி) நூற்றுக்கணக்கில் மனிதர்களைக் காவு கொண்டது. இரண்டு தீவுகளைத் துடைத்துப்போட்டது. தமிழ் நாட்டலோ மேற்குத் தொடர் மலைகள் மொட்டை அடிக்கப்பட்டு விட்டன. வங்கக் கடலோரம் இருந்த அலையாத்திக் காடுகள் வெட்டி எரிக்கப்பட்டு விட்டன. இனி தமிழ்நாட்டுக்குப் பருவ

மழையே கிடையாது. புயல் மழை மட்டுமே உண்டு என்று தேசியச் சுற்றுச்சூழல் கழக இயக்குனர் மெர்ஓம்ஜி சொல்லி 20 ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆட்சிப்பொறுப்பில் உள்ளவர்கள் கண்களையும், காதுகளையும் மூடிக்கொள்வதால் சிக்கல் தானே விலகிவிடாது. நெருப்புக்கோழி தனது தலையை மண்ணுக்குள் புதைத்துக்கொள்வதால் எதிரிகள் மறைந்துவிட மாட்டார்கள்.

இந்தியாவில் வறட்சி என்று சொல்லி உணவு தானியத்தை இறக்குமதி செய்கிறோம். ஆனால், பீகாரிலும், ஒரிசாவிலும், வங்கத்திலும், உத்திரப்பிரதேசத்திலும், கர்நாடகாவிலும், ஆந்திரப் பிரதேசத்திலும், மராட்டியத்திலும் வெள்ளக்காடு.

புல், பூண்டு, செடி, கொடி உணவு தயாரிக்க வெயில் தேவை. அதே வெயில் அளவுக்கு மிஞ்சும் போது செடியே காய்ந்து போகிறது. அப்படித்தான் உயிர் வாழ்க்கைக்குத் தண்ணீர் அடிப்படைத் தேவை; அதே தண்ணீர் அளவுக்கு மிஞ்சினால் மாடு, மனை, பயிர். சுற்றம் என்ற அனைத்தையும் அடித்து நொறுக்கிக் கடலில் சேர்க்கிறது. வெள்ளமும் வறட்சியும் இருதுருவங்கள். ஆனால் இரண்டுக்குமான மூலகாரணம் ஒன்றே ஒன்றுதான், காடு இல்லை.

புகையை உள்வாங்கவும், மேகத்தை மழையாக மாற்றவும், வெள்ள நீரை நிலத்துக்குள் இறக்கவும் காடுகள் தேவை. காடு வளர்ப்பதற்கு என்று திட்டங்கள் அறிவிக்கப்படுகின்றன. பணம் செலவழிக்கப்படுகிறது. காடுகளை மட்டும் காணமுடியவில்லை . இருக்கின்ற மரங்கள் வெட்டப்படுவது மட்டும் குறையவேயில்லை. உலகம் முழுவதும் இந்தப் போக்கு நிலவுகிறது. ஆகாயத்தைக் கரி மூட்டமாக்கி தெருவுக்கு மின்விளக்கு போடுகிறோம். சாலையோர மரங்களை வேரோடு பேர்த்து எறிந்துவிட்டு வாகனங்களின் வேகத்தைக் கூட்டுகிறோம். ஆறுகளில் ஓடும் அவ்வளவு நீரையும் சாக்கடையாக்கிவிட்டு ஊற்று நீரை அடைத்துக் காசுக்கு விற்கிறோம். பயிர்த் தொழில் செய்வோரை அமைக்கப்

பட்டணத்துக்கு இழுத்துக்கொண்டு விட்டு வயல்வெளி களைத் தரிசு போடுகிறோம். இத்தகையச் சீரழிவுகளுக்கு தொழில்வளம் என்று பெயரும் சூட்டுகிறோம். சூறைக் காற்றிலே சிக்கிய குப்பைக் கூளங்களைப் போல் பணக்கார நாடுகள் நடத்தும் சூதாட்டங்களில் ஏழை நாடுகள் சிக்கிவிட்டன. இதன் விளைவாகச் சீரழி உலகமயமாக்கப்பட்டுவிட்டன. இதனால் பாதிப்புக்கு உள்ளாகும் மக்கள் ஏழைகளாகவே உள்ளார்கள். அக்டோபர் ஆறாம்  ஆறாம் நாள் 'இந்து' பத்திரிகை தெளிவாகத் தலையங்கம் தீட்டியுள்ளது.

பேரிடர் வந்த பிறகு நிவாரணம் தேடுவது முக்கியமல்ல. மாறாக பேரிடர் நேரும்போது விளையும் தீமைகளைக் குறைக்கும் நடவடிக்கைகளில் இறங்குவது முக்கியம். இது குறித்து ஐக்கிய நாடுகள் நிறுவனப் பொதுச்செயலாளர் பான் கீ மூன் தொடர்ந்து எச்சரிக்கை செய்கிறார்.

சில ஆண்டுகளுக்கு முன்பு இந்திய அரசு எடுத்துள்ள ஆய்வறிக்கை சில விவரங்களை முன்வைக்கிறது. தேசத்தில் 60% பகுதி நிலநடுக்கத்துக்கு ஆளாகும் வாய்ப்பு உள்ளது. பத்து கோடி ஏக்கர் நிலப்பரப்பு வெள்ளத்துக்கு ஆளாகும் வாய்ப்பு உள்ளது. 8% நிலப்பரப்பு புயல் சேதத்துக்கு ஆளாகும் வாய்ப்பு உள்ளது. 68% நிலப்பரப்பு வறட்சிக்கு இலக்காகும் பரப்பாக உள்ளது. நமது நாடு மட்டும் அல்ல, வளரும் நாடுகள் அனைத்தும் இதுவரைத் திட்டமிட்டுச் செயல்படுத்திய திட்டங்களாலேயே இயற்கைப் பேரிடர்களுக்கு மக்கள் இலக்காகி றார்கள். சுருக்கமாகச் சொன்னால் இயற்கையே பேரிடர்க்கு ஆளாகி உள்ளது. கிருஷ்ணா நதியில் பெருக்கெடுத்த வெள்ளம் நெடுஞ்சாலை களைப் பேர்த்தெடுத்தது. சிற்றூர், பேரூர்களைத் தெப்பக்குளமாக்கியது. இது போலவே கர்நாடகத்திலும் 200க்கும் மேற்பட்ட மக்களைக் கொன்று போட்டது. இரண்டு மாநில முதல்வர்கள் 2000 கோடி ரூபாய்க்கு மேல் நிவாரணம் கேட்டு மைய அரசுக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்.

சுந்தர்லால் பகுகுணா ஆற்றின் குறுக்கே அணை கட்டும் போதெல்லாம் ஆறு சாகடிக்கப்படுகிறது என்று சொன்னார். உண்மைகளை எதிர்கொள்ளும் மனிதர்களாக நாம் இருக்கிறோம். பேரிடர் பாதிப்பைக் குறைப்பதற்கு நிறையக் கருத்தரங்குகள் நடத்திவிட்டோம். முறையாகச் செயலில் இறங்க ஒரு பேரியக்கம் தேவைப்படுகிறது. அது மக்கட் பெருங்கடலாக அமையவேண்டும்!

…………………………..

## இந்தியாவின் மன்னர்கள்

ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு பாரதியார் இப்படிப் பாடினார். “எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு. நாம்

எல்லோரும் சமம் என்பது உறுதியாச்சு".

இன்றோ ,

"எங்கும் கிளைமேட் சேஞ்ச் என்பதே பேச்சு நாம் எல்லார்க்கும் பசி, பிணி என்பது உறுதியாச்சு!"

அன்று பாரதி,

“மண்ணும் இமய மலை எங்கள் மலையே!

இன்னரும் நீர்க் கங்கை ஆறு எங்கள் ஆறே!

என்று பெருமை பொங்கப் பாடினான்.

இன்று, சுந்தர்லால் பகுகுணா,

"இமயமலையைக் காப்பாற்றுங்கள்!

கங்கை நதியைக் காப்பாற்றுங்கள்!

என்று அறைகூவல் விடுக்கிறார்.

தென்னிந்திய ஆறுகளான காவிரி, கிருஷ்ணா, கோதாவரி நதிகளில் மலையில் மழை பெய்வதால் தண்ணீர் ஓடுகிறது. ஆனால் வெள்ளிப் பனிமலை' என்று பாரதி பாடிய இமயமலையில் கோடையில் பனி உருகுவதால் கங்கையில் தண்ணீர் ஓடுகிறது. அந்த கங்கைக்கு வந்த ஆபத்து பற்றி எச்சரிக்கவே சுற்றுச்சூழல் போராளி சுந்தர்லால் பகுகுணா, "இமயமலையைக் காப்போம்!

கங்கை நதியைக் காப்போம்!” என்று தூங்கும் மக்களைத் தட்டி எழுப்புகிறார். கோடையில் இமயமலைப் பனி குளிர் காலத்திலேயே உருகி வெள்ளமாகப் பாய்கிறது. ஆதலால், கோடையில் உருக வேண்டிய பனி காணாமல் போகிறது. கிலோ மீட்டர் கணக்கில் பனி கரைந்து மறைகின்றன. சீனப் பகுதியில் உள்ள திபெத்திய மலைப்பகுதியிலும் பனிப்பாறைகள் கரைந்து மறைவதாக சீன நாட்டு அறிஞர்கள் கூறுகிறார்கள். புவிக் கோளத்தின் இரு துருவங்களான ஆர்டிக், அண்டார்டிக் பகுதியிலும் பனிப்பாறைகள் கரைந்து விழுந்து ஆறாகப் பெருகி கடற்கரையை நோக்கிப் பார் சின்னத்திரையில் காட்சியாகக் காணமுடிகிறது.

தமிழ்நாட்டின் பருவமழை தவறிப் பெய்வதால் நிலம் தரிசாக கிடக்கிறது அல்லது அறுவடைக்குத் தயாரக உள்ள பயிர்கள் நீரில் மூழ்கி சேற்றில் புதைகின்றன. கடலோரம் வாழும் மக்களை ஆழிப்பேரலையும், குடிநீர்ப் பற்றாக்குறையும் அச்சுறுத்துகின்றன. பூமிக் தாய்க்குக் காய்ச்சல் மிகுவதால் பல தீவுகள் மூழ்கிப்போகும் அபாயம் கூடி வருகிறது. அண்மையில் மாலத்தீவு அமைச்சரவை கடலுக்கடியில் 45 நிமிடங்கள்கூடி உலகோர்க்கு வேண்டுகோள் விடுத்தார்கள். அதில் "இன்று நாங்கள்! நாளை நீங்கள்!" என்று குறிப்பிட்டுள்ளார்கள். மாலத்தீவு கடல் மட்டத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் உயரம் மட்டுமே உள்ளது. ஆகவே, “முதலில் மூழ்கப் போவது நாங்களாக இருக்கும். அடுத்து நீங்கள் ஒவ்வொருவராக ..." என்று மாலத்தீவு அமைச்சரவை எச்சரிக்கிறது. "உலகத்தினரே! பூமித்தாயின் காய்ச்சலைக் குறைப்பதற்குத் தேவையானதைச் செய்யுங்கள்! என்று கோரிக்கை விடுக்கிறார்கள்.

பணக்கார நாடுகளின் ஆடம்பரங்களாலும், அத்து மீறல்களாலும், ஆக்கிரமிப்புகளாலும், அடாவடித்தனங்களாலும்தான் பூமிக் காய்ச்சல் அதிகரித்தவண்ணம் உள்ளது. இதை அந்தப் பணக்கார நாடுகள் வேலைக்கு அமர்த்திய விஞ்ஞானிகள் தயாரித்தளித்த அறிக்கையே கூறுகிறது. இவர்கள்

தங்களுக்குத் தாங்களே "வளர்ந்த நாடுகள்' என்று பட்டம் சூட்டிக் கொள்கிறார்கள். சூழலை நாசப்படுத்தி சுற்றத்தை வறுமைக்குள் தள்ளும் நாடுகள் எந்த வகையில் 'வளர்ந்த நாடு'களோ?

காமராஜர் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் கிருஷ்ணசாமி, வளர்ந்த நாடுகளுக்கு உரிய அடையாளம் பற்றி தெரிவித்த கருத்து எல்லாரும் அசைபோடுவதற்கு ஏற்றது. வளரும் நாடுகளுக்கு அடையாளம் அவர்கள் எவ்வளவு பேப்பர்களைக் கழிக்கிறார்கள் என்பதைக் கொண்டே அளவிடப்படுகிறது. அணுகுண்டு வெடிப்பு, ஆயுதம் பரவலில் இருந்து கழிவறைப் பயன்பாடு வரை

எவ்வளவு காகிதத்தை வீணடிக்கிறான் என்பதைக் கொண்டு ஒருவனின் நாகரிக வளர்ச்சி அளவிடப்படுகிறது. அப்படியானால், பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு குகையில் வாழ்ந்த பழங்குடியினர்தான் நாகரிகத்தில் வளர்ந்தவர்கள். அவர்கள் வேட்டையாடி வந்த பெரு விலங்கை குகைக்குள் கொண்டுவந்தார்கள். பசியாற உண்டார்கள், எஞ்சிய கழிவுகளை அங்கேயே விடுத்தார்கள். கழிவுகள் அளவு கடந்து குவிந்த போது இருப்பிடத்தை மாற்றிக்கொண்டார்கள், நாகரிகத்தின் வளர்ச்சியை அளவிட ஒருவன் கழித்தவற்றை கணக்கில் கொள்வதானால் எஞ்சிய தோல், சதை, நரம்பு, மயிர், குருதி ஆகியவற்றை இருப்பிடத்திலேயே குவித்த தொல்குடியினர்தான் நாகரிகத்தில் வளர்ந்தவர்கள்,

பூமித்தாயின் காய்ச்சல் தவிர்ப்பதற்குத் தீர்வு தேடும் இந்தியத் தலைவர்களிடமும் இதே குழப்பம் நிலவுகிறது. பூமியின் வெப்பம் தணிப்பதற்கும் பணக்கார நாடுகள் தொழில்நுட்பத்தை இறக்குமதி செய்ய வேண்டும் என்று கோரிக்கை வைக்கிறார்கள், பணக்கார நாடுகள் ஏற்றுமதி செய்த தொழில்நுட்பங்களால்தான் இன்றைய இந்தியா படுபாதாளத்தில் வீழ்ந்து கிடக்கிறது. இறக்குமதி செய்யப்பட்ட நாகரிகத்தால்தான் இன்று பட்டினிச்சாவும், குறைப்பட்டினியும், புற்றுநோயும், நீரிழிவு நோயும், சிறுநீரகக் கோளாறும் நம்மைப் பாடாய்ப்படுத்துகிறது.

இறக்குமதி செய்யப்பட்ட சோதா விதைகளும், ரசாயன உரங்களும், உயிர்க்கொல்லி நஞ்சுகளும் மக்களைச் சித்ரவதைக்கு ஆளாக்குகின்றன. ஆலைகள் பெருக்கமும், வாகனப் பெருக்கமும், பயிர்த் தொழிலில் பயன்படுத்தும் ரசாயன உரங்களும்தான் பூமிக் காய்ச்சலுக்கு அடிப்படையாக உள்ளன. இவை பற்றி இந்திய விஞ்ஞானிகளும் கதறி அழத்தான் செய்கிறார்கள். பத்திரிகைகள் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். தொலைக்காட்சி செய்திகளுக்கும் குறைச்சல் இல்லை. ஆனாலும் பொறுப்பில் உள்ளவர்கள் நெருப்புக் கோழி தலையை மணலுக்குள் புதைத்துக் கொள்வது போலவே செய்கிறார்கள். பூமித்தாய் காய்ச்சலுக்கான காரணிகளைக் களைவதற்கு எந்த முயற்சியும் எடுப்பதாகத் தெரியவில்லை .

அதனால், இந்திய நாட்டு மன்னர்களாகிய நாம்தான் நடத்தையை மாற்றிக்கொள்ள வேண்டியவர்களாக உள்ளோம். தனித்தனி வாகனத்தில் போவதற்குப் பதிலாக பலர் கூடி ஒரு பொது வாகனத்தில் பயணித்தால் காற்றை மாசு படுத்துவதில் நாம் பங்களிப்பது குறையும். புகை கக்கும் வாகனத்துக்குப் பதிலாக மிதிவண்டியில் பயணிப்பது புகை மூட்டத்தைக் குறைப்பதோடு உடல் ஆரோக்கியம் பேணவும் துணை செய்யும். குழாய் நீரை ஒழுகவிட்டபடி முகம் கழுவுவதற்கு பதில் தண்ணீரை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொண்டு, டம்ளரால் மொண்டு கழுவும் போது தண்ணீர் மிச்சமாவது மட்டுமல்ல, சாக்கடையும் குறையும். மின்னாற்றல் பயன்பாடு மின்னாற்றலை உற்பத்தி செய்வதற்காகக் கரியை எடுப்பது மட்டுப்படும். நம் நடத்தையில் ஏற்படுத்திக்கொள்ளும் சிறியதொரு மாற்றம் சங்கிலித்தொடர் நலம் விளைவதற்கு ஏற்ற அடிப்படையாகும்.

பட்டணவாசிகள் அன்றாடம் காலைப்பொழுதில் தன் வீட்: குப்பையை அருகிலுள்ள காலிமனையில் கொட்டுகிறார்கள். துப்பான் தொழிலாளர்கள் லாரியைக் கொண்டு குப்பையைப் பல கிலோமீட்டர் தாரம் கடத்திச்

செல்ல வேண்டியுள்ளது. அந்த வாகனங்கள் புகையைக் கக்குகின்றன. போக்குவரத்துக்கு இடையூறாக உள்ளன. குப்பையைக் கொண்டு போய்க் கொட்டுகின்ற இடத்தைச் சுற்றி வாழ்பவர்களின் ஆரோக்கியம் பாதிக்கப்படுகிறது. குப்பையை அப்புறப்படுத்தவே அதிகமாக நிதி தேவைப்படுகிறது. உலக வங்கியிடம் கை ஏந்த வேண்டியுள்ளது.

மாறாக, செறிக்கக்கூடிய குப்பைகளை (எஞ்சிய அல்லது கெட்டுப்போன உணவு, கனி, காய், தாள்கள்) நாம் தக்கவைத்து எருவாக (கம்போஸ்ட்) மாற்றிக் கொண்டால், பூமித்தாயின் காய்ச்சல் குறைப்பதற்கு நமது பங்கை ஆற்றியவர்களாவோம். இந்த எருவைப் பயன்படுத்தி காய், கனி, கீரை, பால், முட்டை , இறைச்சி, பூ உற்பத்தி செய்யக் கற்றுக் கொண்டால், நமக்குச் சுவை மிகுந்த நஞ்சை கலவாத உணவு கொல்லைப்புறத்தில், வராந்தாலில், மொட்டை மாடியில், முற்றத்தில் விளையும் நோயற்ற வாழ்வும் வாய்க்குச் சுவையான உணவும் கைக்கெட்டிய தூரத்தில் விளையும். வீடு தோறும் செய்ய முடியாத மக்களுக்காக வீதி முனைதோறும் நஞ்சு கலவாத பூ, கனி, காய் உற்பத்தி செய்ய முடியும். அதுவும் இயலாத மக்கள் நலன் கருதி நகரம், மாநகரத்தைச் சுற்றியுள்ள கிராமங்களைப் பசுமை வளையங்களாக மாற்றமுடியும். வேலை இல்லாத திண்டாட்டம் மறையும். நகர்ப்புறம் நோக்கிய புலப்பெயர்வு குறையும். மேலும் மேலும் பூமி சூடாவது குறையும். தன்னார்வம் மிக்க பொதுநலத் தொண்டர்கள் தேவைப்படுகிறார்கள். அப்படி ஓர் எதிர்காலம் அமையுமேயானால், நாம் இந்தியாவில் மன்னர்களாகவே வாழப்போவது நிச்சயம்!

……………………

என்ன செய்யப் போகிறோம்?

அண்மையில் கவனத்துக்கு வந்த இரு செய்திகள் நெஞ்சைப் பிழிகின்றன. ஒன்று, ஒரு மலைக்காட்டில் ஒரு பெண் யானை பேறு காலத்துக்காக ஒரே இடத்தில்

இரண்டு நாட்களாக நிற்கிறது. மற்ற யானைகள் காலையிலேயே உணவை முடித்துக்கொண்டு குட்டி போடும் யானையைச் சுற்றி காவலுக்கு நிற்கின்றன. மற்ற ஒரு செய்தி இரண்டு குதிரைகள் ஓர் இடத்தில் மேய்ந்து கொண்டு இருந்தன. ஒரு குதிரை கால் தவறிப் பக்கத்தில் இருந்து குழியில் விழுந்து விட்டது. மற்ற குதிரை மேய்வதை நிறுத்தி கண்ணீர் வடித்த வண்ணம் நிற்கிறது.

மேலே கூறப்பட்ட இரு காட்சிகளும் மனிதர்களுக்கு ஏதாவது பாடம் சொல்லித்தர முடியுமா? மனிதர்கள் தவறு செய்யும் போது, 'மிருகத்தனமாக நடந்து கொள்கிறான்' என்று சொல்கிறோமே அது தவறோ? 'மனுசத்தனமாக நடந்து கொள்கிறான்' என்று சொல்ல வேண்டுமோ? என்று எண்ணத் தோன்றுகிறது. நமது நீலகிரி மலையின் இன்றைய நிலையைப் பார்க்கும்போது இந்த எண்ணம் மேலும் வலுப்படுகிறது.

உயிரியக்க மண்டலங்கள் என்று உலகில் 250 மிக முக்கிய வட்டாரங்கள் கட்டப்படுகின்றன. அவற்றில் 13 இந்தியாவில் உள்ளன. அவற்றுள் முதலானதாகவும், முக்கியமானதாகவும் குறிப்பிடப்பட்டது நீலகிரி உயிரியக்க மண்டலம், பகலிலேயே இருள் ஆக்கிரமித்துக் கொள்ளும். மனத்தில் அச்சம் குடிகொள்ளும். எந்த நேரமும் யானை எதிரே வந்து நிற்கலாம். காட்டெருமைத் தாக்குதலை எதிர்கொள்ள நேரலாம். காட்டுப்பன்றி தனது கூரான பற்களால் நமது காலைக் குத்திக் கிழிக்கலாம். மலைப்பாம்பு பற்றியோ சொல்லவே வேண்டாம். இந்த நினைவுகள் நம்மை அலைக்கழித்தாலும் காட்டுக்கு வெளி வருவதற்கு மனம் ஒப்பாது. கணக்கிலடங்காப் பறவைகள் ஆடுகள், மான்கள், புலிகள், சிறுத்தைகள், மரம், செடி, கொடி அசைவுகள், மலை தழுவும் மேகங்கள், பனி தூங்கும் மலர் சிலிர்த்து நிற்கும் புல்வெளிகள் என்று ஒருமுறை சென்று திரும்பி மனிதரை மீண்டும் மீண்டும் கவர்ந்து இழுக்க வல்ல நீலமலையை மலைகளின் ராணி என்று வர்ணிப்பார்கள். அந்த ராணி இப்போது சீர்குலைந்து கிடக்கிறாள்.

நவம்பர் மாதம் எட்டாம் தேதி தொடங்கிய மழை விடாது கொட்டவே பெருவெள்ளத்தை உள்வாங்க முடியாத மலை இயல்பு நிலை இழந்து நடுங்கிப் பிளந்து சரிய, மொத்த மலையையும் அங்கு வாழும் மக்களையும் துயரம் கவ்விக்கொண்டது. நீலகிரி மாவட்டத்தில் உள்ள 306 வழித்தடங்களும் சேதத்துக்கு உள்ளாகின. மின்சாரம் மற்றும் குடிநீர் விநியோகம் நின்றுபோனது.

மேட்டுப்பாளையம் சாலையில் பர்லியாறு வரை உள்ள ஏழு கிலோ மீட்டர் தொலைவுக்குள் 150 இடங்களில் பாறை சரிந்து விழுந்தது. தண்டவாளத்துக்கு அடியில் இருந்த மண் அரித்துச் செல்லப்பட்டதால் தண்டவாளம் பல்லக்கு போல தொங்கியது. பல கிராமங்களிலும் கெட்டியாகக் கட்டப்பட்டிருந்த கட்டடங்கள் ஆட்டம் கண்டன. ஆற்றோரங்களிலும், மலைச் சரிவுகளிலும் கட்டப்பட்டிருந்த ஏழைகளின் குடிசைகள் மண் மூடிப்போயின. வசதி படைத்தவர்களின் வீடுகளையும், இயற்கை விட்டுவைக்கவில்லை. பணத்தைத் தண்ணீராய் வாரி இறைத்து அங்குலம் அங்குலமாய்ப் பார்த்து ரசித்துக் கட்டப்பட்ட ஆடம்பர மாளிகைகள்கூட பேரழிவில் இருந்து தப்ப முடியவில்லை.

45 பேர்களுக்கு மேல் மக்கள் மண்ணில் புதைந்து போனார்கள். வீடு இழந்த 1028 பேர் 14 நிவாரண முகாம்களில் தங்கவைக்கப் பட்டுள்ளனர்.

எதனால் இந்தச் சீர்கேடுகள் நடக்கின்றன என்று நாம் விளங்கிக் கொள்ளவில்லை என்றால், இயற்கைப் பேரழிவுகளை நாம் திரும்பத் திரும்ப எதிர்கொள்ள நேரிட வாய்ப்பு உண்டு. அந்நியர்கள் நுழையும் வரை நமது மலைகள் சிறப்பாகவே இருந்தன, கோவைக்கு மாவட்ட ஆட்சியராக வந்த ஆங்கிலேயர் சல்லியன் குதிரை மீது ஏறி சவாரி செய்து நீலகிரி மலைக்குப் போய் தனக்கு ஒரு வீடு கட்டிக்கொண்டான். மற்றபடி, பழங்குடி மக்களும், பல்லுயிர்களும் நீலமலையை வாழ்விடமாகக் கொண்டிருந்தார்கள்.

சல்லியனைத் தொடர்ந்து பல வெள்ளையர்கள் இங்கிலாந்து இயற்கையை இந்தியாவில் அனுபவிக்க நீலகிரி மலையில் வீடுகள் கட்டிக் குடியேறினார்கள். அவர்களுக்கு மிகவும் நெருக்கமாகியிருந்த உருளைக் கிழங்கு, முட்டைகோஸ், காலிஃப்ளவர், கேரட், பீன்ஸ் என்று பயிர் செய்யத் தலைப்பட்டார்கள். அப்போதும்கூட மலை அவ்வளவாகச் சேதப்பட்டுவிடவில்லை.

ஆங்கில வியாபாரிகள் சீனாவில் செய்து கொண்டிருந்த தேயிலை வணிகம் படுதோல்வியில் முடியவே, அந்த வணிகர்கள் இந்திய மலைகளை ஆக்கிரமித்தார்கள். காடுகளை அழித்துத் தேயிலைத் தோட்டங்கள் போட்டார்கள். அன்று தொடங்கியது பேரழிவு. 1947-ல் சுதந்திரம் பெற்ற பிறகு காடுகள் மீட்டெடுக்கப்படவில்லை. காட்டு நிலங்கள் சூறையாடப்பட்டு விட்டன.

1975 வாக்கில் ஒன்பது தேயிலைத் தோட்டக்காரர்கள் உச்ச நீதிமன்றத்தில் ஒரு மனு கொடுத்தார்கள், அதில் நாங்கள் காட்டு நிலங்களைத் திருத்தித் தேயிலை பயிர் செய்து வருகிறோம். இதற்குப் பட்டா போட்டுத் தரவேண்டும். அவ்வாறு செய்தால், மீதம் உள்ள காடுகளை நாங்கள் பாதுகாப்போம் என்று உறுதிமொழி கொடுத்தார்கள். அந்த வழக்கில் உச்சநீதிமன்றம் இதுவரை எந்த ஒரு தீர்ப்பும் எழுதவில்லை . ஆனால், நடந்தது என்ன? பல்லாயிரம் ஏக்கர் பரப்பு காடுகள் அழிக்கப்பட்டுத் தேயிலைத் தோட்டம் பன்னாட்டு நிறுவனங்களின் வணிக அதிகார மையங்களாக மாற்றப்பட்டுள்ளது. மக்களின் ரத்தத்தைக் குடித்து பல்லாயிரம் கோடிகளை சுரண்டும் அவர்களை நாம் என்ன செய்யப் போகிறோம்?

…………..

## காந்தியின் சொல்!

தை முதல் நாள் என்பது தமிழர்களுக்குத் தனிச் சிறப்புடைய ஒருநாள். அறுவடைக்குப் பிறகு புது வரவு வரப்போவதை முன்கூட்டித் தெரிவிக்கிற பொங்கல் விழா

மண்ணை மாற்றி விளைச்சல் எடுப்பதில் தன்னோடு உழைத்த மாடுகளுக்கும் உழவர் விழா எடுக்கின்ற நாள். தாய் கொடுக்க முடியாமல் போனபோதுகூட பால் கொடுத்து வளர்க்கின்ற பசுவுக்கு சோறுட்டும் நல்லநாள். இவைக்கு அப்பால் ஒரு முக்கியத்துவமான நாள் அதுதான் போகி. வேண்டாததையெல்லாம் வெளியில் எடுத்து வீசுகின்ற நாள். நாமும் கூட பழைய ஆண்டு கழித்து புத்தாண்டுக்குள் கால் வைக்கும் போது எவற்றையெல்லாம் களைய வேண்டும் என்று பார்ப்பது நம் கடமையல்லவா!

2009-ஆம் ஆண்டு பின் பகுதியில் ஊடகங்களை அடிக்கடி தொட்ட நான்கு செய்திகளைப் பார்ப்போம்.

1. அரியானா மாநிலத்து தலைமைக் காவல் துறை அதிகாரியின் தகாத நடவடிக்கையால் 14 வயது பெண் தற்கொலைக்குத் தள்ளப்பட்டாள். 19 ஆண்டுகளாகக் குற்றத்தில் இருந்து தன்னை காத்துக் கொள்வதற்காக அந்த அதிகாரி சட்ட விரோதமாக எடுத்த நடவடிக்கைகள் தலைகுனிவைத் தருகிறது. 'அவர் மீது தக்க நடவடிக்னக எடுங்கள்' என்று மாநில அரசு மத்திய அரசைக் கேட்டுக் கொண்டுள்ளது. குற்றங்கள் நடை பெறாமல் தடுப்பதற்கும். குற்றவாளிகள் தண்டிக்கப்படுவதற்கும் அதிகாரத்தைக் கையில் வைத்திருக்கின்ற ஒருவர் குற்றவாளியாக நிறுத்தப்பட்டார். அவர் பெயர் ரதோர்.

2.ஆந்திர மாநிலத்தில் ஆளுநராகப் பதவி வகித்தவர் என்.டி. திவாரி. இவரைக் காவலில் வைத்து விசாரணை நடத்தப்படவேண்டும் என்று  ஆந்திரா முழுவதும் மகளிர் அமைப்புகளும், அரசியல் கட்சிகளும் ஆர்ப்பாட்டங்கள் நடத்தின. கவர்னர் உடனடியாக ராஜினாமா செய்துவிட்டு ஊர் திரும்ப வேண்டிய அவலம்.

3. கர்நாடக மாநிலத்தின் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதி பதவியில் இருப்பவர் தினகரன். இவர் பெயர் உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் பட்டியலில் இருந்து தள்ளிவைக்கப்பட்டுள்ளது. காரணம், இவர் ஏழை மக்களுடைய அனுபவத்தில் இருந்த புறம்போக்கு

நிலத்துக்கு வேலி போட்டுத் தனதாக்கிக் கொண்டுவிட்டார். வழக்குகளை விசாரித்து நீதி வழங்கவேண்டிய தின்கரன் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்பட்டிருக்கிறார்.

4. பசுமைப் புரட்சித் திட்டம் என்ற பெயரில் நிலங்களில் கொட்டப்பட்ட ரசாயன உரங்கள் நிலத்தை மலடாக்கிவிட்டன. பயிரில் தெளிக்கப்பட்ட நஞ்சுகள் நுகர்வோரை நோயாளிகளாக்கி விட்டன. நதி நீரைக் (குடிப்பதற்கு அல்ல) குளிப்பதற்குக்கூட தகுதியற்றதாக்கி விட்டன. செயல்படுத்தப்பட்ட திட்டங்களால் காடுகள் அழிக்கப்பட்டு காற்று வெளியின் வெப்பம் கூடுவதால் பருவமழை தவறி பஞ்சமும், பட்டினியும், சத்துணவுப் பற்றாக்குறையும், பிழைப்புக்காக புலம் பெயர்தலும் மக்களை அலைகழிக்கின்றன. வறுமை ஒழிப்பதற்காக கொண்டு வரப்பட்ட பச்சைப் புரட்சியும், வெள்ளைப் புரட்சியும், நீலப்புரட்சியும் இப்போது இல்லாமையைத் தோற்றுவித்திருக் கின்றன. இப்படி எதிர் முரணாக நடத்தி இருப்பதற்கு எது காரணம்?

"துறவி ஒருவர் ஒரு எலியை பூனையிடம் இருந்து காப்பாற்ற எலியைப் பூனையாக மாற்றுகிறார். பிறகு நாயிடம் இருந்து காப்பாற்ற அதை நாயாக மாற்றுகிறார். முடிவில் சிங்கத்திடம் இருந்து காப்பாற் எலியைச் சிங்கமாகவே மாற்றுகிறார். ஆனாலும் சிங்கத்தின் தோற்றத்திலும் இருந்த எலி சிங்கத்தைப் பார்த்து குலைநடுங்குகிறது. காரணம், அது தோற்றத்தில் சிங்கமாகவும், உள்ளுக்குள் எலியாகவும் இருக்கிறது. இதை உணர்ந்த துறவி தனது தவறை உணர்ந்து மீண்டும் அதனை எலியாக மாற்றுகிறார். அது போல எலியைப் போல சுயநலம் கொண்டவர்கள் வேடதாரிகளாக மாறி பெரும் பதவிகளில் அமர்ந்து கீழே இறங்குவதற்குள் எல்லா அநீதிகளும் மனிதச் சமூகத்தின் மேல் சுமத்தப்படுகின்றன.

நண்பர் ஒருவர் சொல்லிக்காட்டினார். 2000 ஆண்டுகளுக்கு முன்பு புத்தர், மகாவீரர் போன்ற மாமனிதர்கள் தான் பிச்சை எடுக் பிறருக்கு உணவளித்து

தான் உண்பதை அறமாக மக்கள் உணர்ந்திருந்தார்கள். ஆனால், இன்று உணவை விற்பவர்கள் பெரிய மனிதர்கள் வேடத்தில் உலவுகிறார்கள். தண்ணீரைக்கூட விற்பனை பண்டமாக்கிவிட்டார்கள்.

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம் (குறள் 25)

பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் இவற்றை நீக்கி வாழ்வதே அறம். இவற்றை எந்த மட்டத்தில் நீக்குவது?

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்

மாணா செய்யாமை தலை (குறள் 317)

இதன் பொருளை ஓர் முறை எளிய தமிழில் நினைத்துப்பார்ப்பது அவசியம். எப்பொழுதும் எந்த வகையிலும் எவருக்கும் மனத்தில் கூட இழிவுதரும் செயல்களை நினைக்காமல் இருப்பது நல்லது.

உணவுப் பயிர் வளர வேண்டிய இடத்தில் தொழிற்சாலைகளும் கட்டடங்களும் எழுப்பப்படுகின்றன. விளைகின்ற உணவுப் பயிர்கள் டீசலாகவும், போதைப் பொருளாகவும், கால்நடைத் தீவனமாகவும் மாற்றப்படுகின்றன. அதனால், உணவுப் பற்றாக்குறையும், சத்துணவுப் பற்றாக்குறையும் தோன்றுகின்றன. துவரை, உளுந்து போன்ற அத்தியாவசிய பண்டங்களின் விலை தங்கத்தோடு போட்டி போடுகின்றன.

பூமி சூடாவதால் விளைகின்ற தீமைகளைக் களைவதற்கு ஆவண செய்வதற்காக டென்மார்க் தலைநகரில் கூடிய 195 நாட்டுத் தலைவர்கள் உருப்படியாக எந்த முடிவும் எடுக்காது கலைந்து போயிருக்கிறார்கள். காரணம், தங்கள் நாட்டில் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்கள் பாதிக்கப்படும் என்று அவர்கள் கவலைப்படுகிறார்கள். அதாவது இயற்கை வளங்களைப் பாழ்படுத்தும் திட்டங்கள் என்று கணிக்கப்படுகின்றன. அப்படியானால், இயற்கை வள ஆதாரங்கள் சிதைக்கப்படுவது

குறைவதற்கு வாய்ப்பே இல்லை. இது எது வரையில் போகும்?

தான் பெண்டு, தன் பிள்ளை, சோறு, வீடு சம்பாத்தியம் இவையுண்டு தானுண்டு என்று நினைக்கின்ற வரை எலி போல உள்ளம் படைத்தவர்கள் கிடைத்ததையெல்லாம் பதுக்குவார்கள்' என்று புரட்சிக் கவிஞர் கூறுகிறார். தூய உள்ளம், அன்புள்ளம், பெரிய உள்ளம், உலக மக்களெல்லாம் ஒன்றே என்னும் தாயுள்ளம்தனில்தான் இன்பம் விளைய முடியும் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

நாமும்கூட அப்படி ஒரு தூய உள்ளம் பெறுவதற்கு வாழ்த்துகிறேன். பூமியால் மக்களுடைய தேவைகளை நிறைவு செய்ய முடியும். பேராசையை அல்ல என்ற காந்தியின் சொல்லை நெஞ்சில் பதிப்போமாக!

..............................

## மருந்தில்லா மருத்துவம்!

இயற்கையானது 460 கோடி ஆண்டுகள் எடுத்துக்கொண்ட முயற்சியின் விளைவாக அற்புதமான இந்த உலகத்தைத் தோற்றுவித்தது இந்த உலகத்தில் மனிதனையும் தோற்றுவித்தது. அதாவது பரிமாண வளர்ச்சியில் மனிதன்தான் உயர்ந்தமட்ட ஆற்றல். மனிதன் தோன்றுவதற்கு முன்பே மனிதனுடைய தேவையை எல்லாம் இயற்கை படைத்திருந்தது. ஆனால், அப்படித் தோற்றுவிக்கப்பட்ட மனிதன் தனது வாழ்வுக்கு ஆதாரமான பூமியைச் சிதைத்துக் கொண்டிருக்கிறான்.

உலகச் சுகாதார அமைப்பு 2007-ஆம் ஆண்டு வெளியிட்ட ஆய்வறிக்கையில் மனிதனால் உருவாக்கப்பட்டு வரும் காலநிலை மாற்றம் 2020-ஆம் ஆண்டு முதல் உலகெங்கும் ஆண்டு தோறும் மூன்று லட்சம் பேர் பலியாகக் காரணமாக இருக்கும் என்று கணக்கிட்டுள்ளது. இந்தக் கணிப்புக்கு முன்கூட்டியே 2000 வது ஆண்டு முதல் காலநிலை மாற்றத்தால் உலகெங்கும் ஒரு லட்சத்து 50 ஆயிரத்துக்கும் அதிகமானோர் உயிர் இழந்துள்ளனர்.

வளர்ச்சி அடைந்தவை என்று சொல்லப் படுகிற பணக்கார நாடுகள் இந்த கேடுகளுக்குக் காரணமாக இருக்கின்றன.

ஆனால், ஏழை நாட்டு மக்கள் இதன் பாதிப்புகளைச் சந்திக்கின்றனர். குறிப்பாக, தென்கிழக்கு ஆசியா, ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய கண்டங்களைச் சேர்ந்த மக்கள் காலநிலை மாற்றத்தின் தாக்கத்தால் பாதிக்கப்படுகிறார்கள். குறிப்பாக, மலைவாழ் மக்கள்தான் அதிக அளவில் உயிர் இழந்திருக்கின்றனர். நிலைமை இப்படி இருக்க, இதுபற்றி விவாதிப்பதற்காக டென்மார்க் நாட்டின் கோப்பன் கேகன் நகரத்தில் 2009-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கூடிய 195 நாட்டு

பிரதிநிதிகள் எந்த ஒரு முடிவும் எடுக்காமலே பிரிந்தார்கள். அதனால் பொறுப்பு வளரும் நாட்டு மக்களின் தலையில் சுமத்தப்பட்டுள்ளது.

பன்னாட்டு கம்பெனிகளால் இறக்குமதி செய்யப்படும் மரபணு

மாற்றுத் தொழில்நுட்பம் இரண்டாவது பச்சைப் புரட்சி என்று பட்டம் சூட்டப்படுகிறது. முதல் பச்சைப் புரட்சி ஏற்படுத்திய சீரழிவுகளையே இன்னும் நம்மால் தடுத்து நிறுத்த முடியவில்லை. இந்து நாளேட்டின் சிறப்பு நிருபர் சாய்நாத் இப்படிக் கூறுகிறார். மராட்டிய மாநிலத்தில் நடைபெற்று வரும் உழவர்கள் தற்கொலை பலரின் கவனத்தை ஈர்த்துள்ளது. அம்மாநிலத்தில் அடங்கியுள்ள விதர்பா பகுதிக்கு பிரதமர் மன்மோகன்சிங் விஜயம் செய்தார். அதன் பிறகு 3,750 கோடி ரூபாய் நிதி வழங்கினார். இது அல்லாமல் மராட்டிய மாநில முதல்வர் 1,075 கோடி ரூபாய் செலவிட்டார். தொடர்ந்து மன்மோகன் சிங் கடன் தள்ளுபடி செய்ததில் 9,000 கோடி ரூபாய் கிடைத்தது. அது போக, விடுபட்டுப் போனவர்களுக்காக மாநில அரசு 500 கோடி ரூபாய் ஒதுக்கியது.

ஒட்டுமொத்தமாக 20,000 கோடி ரூபாய் கடந்த மூன்று ஆண்டுகளில் செலவிடப்பட்டுள்ளது. ஆனால், அதே மூன்று ஆண்டுகளில் தான் எங்கும் எப்போதும் இல்லாத அவலம் மராட்டிய மாநிலத்தில் நிகழ்ந்துள்ளது. 2006-க்கும்

2008-க்கும் இடையில் மராட்டிய மாநிலம் 12493 உழவர் தற்கொலைகளைச் சந்தித்தது. இத்தகைய துயரச் சம்பவங்கள் தொடர்வதற்கான அடிப்படைக் காரணம் என்ன?

நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்

வாய் நாடி வாய்ப்பச் செயல்

என்று கூறுகிறார் திருவள்ளுவர். நோய் அறிவதிலேயே தடுமாற்றம் இருக்கும் போது நோய் முதல் நாடுவது எப்படி?

அண்மையில் மருந்தில்லா மருத்துவம் பேணும் மருத்துவர் உமர் ஃபாருக் எழுதிய உடலின் மொழி நூலைப் படித்தேன். அதில் இரண்டு கருத்துக்களை அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார். முதல் கருத்து இயற்கை ஒரு காலத்திலும் தவறு செய்வதில்லை. இரண்டாவது கருத்து. உடல் ஒரு போதும் தன் கடமையை செய்யத் தவறுவதில்லை .

நாம் உண்ணுகிற உணவில் உள்ள சத்துக்களை எடுத்துக் கொள்ளும் உடல் அதனை மூன்று நோக்கங்களுக்காகப் பயன்படுத்துகிறது. ஒன்று, செரிமானம், இரண்டாவது இயக்கம், மூன்றாவது நோய் எதிர்ப்பு அல்லது பழுதுபார்த்தல். செரிமானம் என்பது இரண்டு கூறுகளைக் கொண்டது. ஒன்று உட்கொள்ளும் பொருளில் உள்ள சத்துக்களைப் பிரித்து தன்மயமாக்குதல். இரண்டாவது உட்கொண்டவற்றில் அல்லது உடலில் சேமிக்கப்பட்டுள்ள கழிவுகளை வெளியேற்றுதல், இப்படி கழிவுகளை வெளியேற்றுவதற்கு உடல் பின்பற்றும் உத்திகள் வாந்தி , இருமல், மயக்கம், வயிற்றால் போவது போன்றவையாகும். இப்படிக் கழிவுகளை வெளியேற்றும் போக்கையே நாம் நோய்கள் என் கருதுகிறோம். மருந்தை உட்கொண்டு கழிவு வெளியேற்றத்தைக் தடை செய்யும்போது கழிவுகள் உடலுக்குள்ளேயே தேங்கி நீராக நோய்களைத் தோற்று விக்கிறது. இத்தகைய தீராத நோய்களிலிருந்து விடுபடுவதற்காகவே யோகப் பயிற்சிகளை நாம் மேற்கொள்ளுகிறோம்.

இப்படி ஐம்பூதங்களால் ஆன உடலில் நிகழ்வதைப் போலவே பயிர் வளர்ச்சியிலும் நிகழ்கிறது. தானாக நிகழும் சிகிச்சையை நோய் என்று கருதி, தொலைதூரத்தில் இருந்து வரும் வித்துக்களையும், உப்புக்களையும், நஞ்சுகளையும் நிலத்தில் கொட்டி தீராத நோய்களை வரவழைத்துக்கொள்கிறோம். இனிமேலாவது நோய் நாடி முதல் நாடுவோம்.

…………………..

## பச்சைப் புரட்சியின் அப்பா

இந்திய நாட்டின் உணவு உற்பத்தியை தனது பிடியில் கொண்டு வந்து மக்களை வறுமைக்குள் தள்ளி, கோடி கோடியாக லாபம் கொழிப்பதற்கு அமெரிக்கக் கம்பெனிகள் முயற்சி எடுத்துள்ளன. அவற்றின் இந்தியக் கூட்டாளிகள் அதற்கு உடன்பட்டிருக்கிறார்கள். இது குறித்து பல கட்டுரைகளில் நான் முன்பே எழுதியிருக்கிறேன். இன்று இன்னொரு தகவலும் வெளியாகியுள்ளது. இந்திய தலைமை அமைச்சர் மன்மோகன்சிங் அமெரிக்காவிற்குச் சென்று, மற்றுமொரு வேளாண் ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டுத் திரும்பியுள்ளார். எத்தகைய சூழலில் இப்படி எல்லாம் நாடு அடகு வைக்கப்படுகிறது என்பதை எடை போட்டுப் பார்ப்பதற்கு ஒரு குடியரசு தேசத்தில் எல்லாக் குடிமக்களுக்கும் உரிமை இருக்கிறது என்று நாம் நினைக்கிறோம்.

மரபணு பொறியியல் அனுமதி வழங்கும் குழு பி.டி. கத்திரிக்காயை வணிக ரீதியில் பரப்புவதற்கு அனுமதி வழங்கிவிட்டது . நாடெங்கிலுமிருந்து அதற்கு எதிர்ப்பு கிளம்பியது. 12 மாநிலங்கள் பி.டி.கத்தரிக்கு எதிர்ப்பு தெரிவித்தன. 7 மாநிலங்களில் நடந்த கலந்தாய்வுக் கூட்டங்களில் மக்களினுடைய எதிர்ப்பை சுற்றுச்சூழல் அமைச்சர் நேரிடையாகவே எதிர்கொள்ள நேர்ந்தது. ஆந்திர மாநிலத்தில் இருக்கும் இரண்டு பல்கலைக்கழகங்கள் எதிர்ப்பு தெரிவித்தன. இந்திய

வேளாண் ஆராய்ச்சிக் கழகத்தில் பணியாற்றி ஓய்வு பெற்ற விஞ்ஞானிகள் 'பி.டி. கத்தரிக்காயால் தீங்கு விளையும்' என்பதை வெளிப்படையாகப் பேசினார்கள். அரசுப் பதவியில் இருப்பவர்கள் அதை பேச முடியாத நிலை இருப்பதையும் அவர்கள் குறிப்பிட்டார்கள். பி.டி, விதை உற்பத்தி செய்த கம்பெனியில் வேலை பார்த்து வெளியில் வந்த இரு விஞ்ஞானிகளும் பி.டி. கத்திரிக்கு எதிர்ப்பு தெரிவித்தார்கள்.

இவ்வளவுக்குப் பிறகும் பி.டி. கத்தரியைப் அமைச்சர் புறந்தள்ளவில்லை; மரபணு மாற்றுப் பயிர்களை தடை செய்யவிலை. நடுநிலையாளர்கள் ஆராய்ந்து முடிவுகள் வெளியிட்ட பிறகு. ‘’அனுமதி கொடுப்பது பற்றி சிந்திப்போம்" என்று சொன்னார். கம்பெனி ஏஜெண்டுகளால் ஜீரணிக்க முடியவில்லை. "பி.டி கத்திரிக்காய்க்கு மட்டுமே இந்த தீர்ப்பு பொருந்தும். பி.டி. தக்காளி பி.டி. வெண்டைக்காய், பி.டி. நெல், பி.டி. மக்காச்சோளம். .. முட்டைக்கோஸ் இவற்றை இந்த தீர்ப்பு பாதிக்காது” என்று அமைச்சர் திரும்பத் திரும்பச் சொன்னார்.

பச்சைப் புரட்சியின் அப்பா எம். எஸ். சாமிநாதன் பி. கத்தரிக்காய்க்கு மட்டுமே தீர்ப்பளித்து, நடந்து கொண்டிருக்கும் மற்ற ஆராய்ச்சிகளைத் தடுக்காமல் இருப்பது வரவேற்கத்தக்கது என்று கம்பெனி புகழ் பாடவும் செய்தார். ஆனால் உழவு உணவு அமைச்சர் சரத்பவார், பி.டி. பயிர்களை இந்தியாவில் பரப்புவதற்கு ஒரு பகீரத முயற்சியில் இறங்கியுள்ளார். 'பி.டி. பயிர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டால் முதலீடு செய்திருக்கும் கம்பெனிகள் இழப்பைச் சந்திக்க நேரிடும்' என்று கண்ணீர் வடிக்காத குறையாக தலைமை அமைச்சருக்குக் கடிதம் எழுதினார்.

அறிவியல் தொழில்நுட்பத்துறை அமைச்சர் இன்னும் ஒரு படி மேலே சென்று சட்ட முன் வரைவு ஒன்றை பாராளுமன்றத்தில் தாக்கல் செய்துள்ளார். அதில் நவீன உயிரி தொழில்நுட்பம் பற்றிக் குறைவாகப் பேசுபவர்களுக்கு ஓராண்டு சிறைத்தண்டனை, இரண்டு

லட்சம் ரூபாய் அபராதம் என்றெல்லாம் குறிப்பிடப்பட்டிருப்பதாக பத்திரிகைகளில் செய்திகள் பார்க்கிறோம். 57 ஆண்டு காலக் குடியாட்சியில் வாய்ப்பூட்டுச் சட்டம் கொண்டு வரும் அளவிற்கு அமெரிக்கக் கம்பெனியின் செல்வாக்கு இங்கே கோலோச்சுவதைப் பார்க்கிறோம். மாநில அரசுகள் எதிர்ப்பு தெரிவிக்கக்கூடாது, நீதிமன்றங்கள் புகார்களை விசாரணைக்கு ஏற்கக் கூடாது என்றெல்லாம் கூட சட்ட முன் வரைவு குறிப்பிடப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. வாழ்க சுதந்திரம்!

இத்தகைய பின்னணியில்தான் இந்திய அமெரிக்க வேளாண் ஒப்பந்தம் இரண்டு தனித்துவம் பெறுகிறது. இந்திய வேளாண் அறிவியல் ஒப்பந்தம் முன்பே கையெழுத்தாகியுள்ளது. அமெரிக்க ஜனாதிபதி புஷ் இந்தியா வந்திருந்தபோது கையெழுத்தான அந்த ஒப்பந்தத்தின் ஒரு கிளை தான் இந்த ஒப்பந்தம். இந்த ஒப்பந்தத்தின்படி அமெரிக்கக் கம்பெனிகளும், இந்தியக் கம்பெனிகளும் கைகோர்த்துக் கொண்டு வணிகச் சுரண்டலில் ஈடுபடும் வாய்ப்புள்ளது. முதல்

ஒப்பந்தத்தின் கூறுகளில் உணவு பதப்படுத்துதல் (Food processing) ஒரு தனிபிரிவாக வரையப்பட்டு அதற்காக நிதியும் ஒதுக்கப்பட்டுள்ளது. அதன்படி இன்றைய ஒப்பந்தம் இரு நாட்டு கம்பெனிகளும், இந்தியாவின் விளைபொருள்களைக் கொள்முதல் செய்து பதப்படுத்தி டின்களிலு, டப்பாக்களிலும் அடைத்துப் பதுக்கி, விலையை உயர்த்திக் கொள்ளை லாபம் சம்பாதிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. பணக்கார நாடுகள் இது வரையில் சுற்றுச்சூழலுக்குச் செய்த கொடுமையால் தட்ப வெப்ப நிலையில் மாற்றம் ஏற்பட்டு உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது. தவறு செய்பவர்கள் பணக்கார நாடுகள், பாதிப்பை அனுபவிப்பவர்கள் ஏழை நாடுகள். ஏழை நாடுகளிலும் தவறு செய்பவர்கள் பணக்காரர்கள். பாதிக்கப்படுகிறவர்கள் ஏழை எளிய மக்கள். உற்பத்தி செய்கின்ற பொருட்களை வெளிச் சந்தைக்கு வராதபடி, தடுத்து பற்றாக்குறையை ஏற்படுத்தி

விலையை உயர்த்தி கம்பெனிகள் லாபம் கொழிப்பது இன்றைக்குப் புதியதல்ல. நீண்ட காலமாக நடந்து வரும் ஒன்றுதான். ஆனால் ஒரு ஜனநாயக நாட்டின் தலைமை அமைச்சர் வெளியில் தெரியாதபடி அன்னிய தேசத்தில் போய் நமது தேசத்தின் உரிமைகளை அடகு வைத்து அதற்காக ஒப்பந்தம் செய்து கொள்வது எந்த வகையில் நியாயம் என்று நமக்கு புரியவில்லை.

பணக்கார நாடுகள் உணவு தானியங்களை பயோ டீசலாக மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஏழை நாடுகளில் கரும்பு உற்பத்தி செய்யச் சொல்லி அதையும் பயோ டீசலாக மாற்றுகிறார்கள். உணவு தானியம் உற்பத்தி செய்து கொண்டிருந்த இந்திய உழவர்களை மக்காச்சோளம், சோயா, மொச்சையும் பயிர் செய்யச் சொல்லி கால்நடைத் தீவனமாக மாற்றுகிறார்கள். உலகம் முழுவதும் உற்பத்தியாகும் உணவு தானியத்தில் 48 விழுக்காடு பன்னித் தீனியாகவும், கோழித் தீனியாகவும் மாற்றப்படுகிறது.

இந்தியாவில் நவதானியங்களை சாராயம் அடிப்பதற்குப் பயன்படுத்த கம்பெனிகள் தீவிர முயற்சியில் இறங்கியுள்ளது. உழவுக்கும், உணவுக்கும் அடிப்படையான மாடுகள், இறைச்சியாக மாற்றப் படுகின்றன. இத்தகைய சூழலில் இரு தேசத்து கம்பெனிகளும் கைகோர்த்துக்கொண்டால் இந்திய மக்களின் உணவுப் பாதுகாப்பு என்னவாகும் என்பதை பாராளுமன்றம் விவாதிப்பதற்கு ஒரு வாய்ப்பை இந்திய பிரதமர் அளித்திருக்கக் கூடாதா என்பது நமது கோரிக்கை.

இன்று காலை தொலைபேசி ஒலித்தது. மறுமுனையில் விஞ்ஞானி எஸ்.என். நாகராஜன் பேசினார். "இந்திய தேசம் மிகப் பெரிய நெருக்கடியைச் சந்திக்க வேண்டியுள்ளது. இந்திய விவசாயம் அமெரிக்கக் கம்பெனிகளுக்குக் கைமாற்றப்படுகிறது. அவர்களுடை பண்ணைகளில் இந்திய உழவர்கள் கூலி வேலைக்கு அமர்த்தப்படுவார்கள். கிராமங்களில் உள்ள மக்களின் எண்ணிக்கை மூன்றில் ஒன்றாக குறைக்கப்பட உள்ளது.

அமெரிக்கக் கம்பெனிகளுடைய கார்கள் வேகவேகமாக செல்வகம் காகத்தான் சாலையோர மரங்களை நீக்கி சாலைகள் அகலப்படுத்தப் படுகின்றன. நமக்கு வேலை நிறைய உள்ளது. அன்னிய கம்பெனிகளின் புதிய ஆக்கிரமிப்பை எதிர்த்து இந்தியா முழுவதும் பிரச்சாரத்தை தீவிரப்படுத்த வேண்டியுள்ளது." விஞ்ஞானி நாகராஜனின் பேச்சில் அர்த்தம் இருப்பதாகவே உணர்கிறேன்.

………………………

# பூமியின் குழந்தைகள்

"பூமியில் சுற்றுச்சூழலுக்கும், மனித வாழ்க்கைக்கும் நிறையத் துன்பங்கள் இழைக்கப்படுகின்றன. காரணம், அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு பார்ப்பதற்கு மட்டுமே மக்கள் பழகியுள்ளார்கள். அடுத்த நூறு ஆண்டுகளுக்கு பார்ப்பவர்கள் நாட்டில் எங்கும் காணப்பட வில்லை ". - சத்குரு

குரங்கு நிலையில் இருந்து மாறிய மனிதர்கள் நீண்ட நெடுங்காலம் இயற்கையோடு நெருக்கமாக உறவாடி இருந்தார்கள். நாடோடிகளாக இருந்தவர்கள் தங்கி பயிர்த்தொழிலில் ஈடுபட்டபோது அவர்கள் இயற்கையைச் சிதைப்பது தொடங்கியது. ஆனால், அதிலிருந்து மீளுவது பற்றி அவர்கள் சிந்தித்தார்கள்.

மண் மீது வளர்ந்திருந்த முள் புதர்களை வெட்டிப்போட்டு அவற்றுக்குத் தீ வைத்து எரித்தார்கள். சூடு தணிந்ததும் விதைகளை விதைத்தார்கள். பயிர் வளர்ந்து விளைந்தது. மறு ஆண்டு அதேபோல விளையவில்லை. அதை விட்டுவிட்டு இன்னொரு பகுதிக்குப் போய் முள் புதருக்கு தீ மூட்டவும், விளைச்சலை அறுக்கவும் செய்தார்கள், ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் முதல் பகுதிக்குப் போய் வளர்ந்திருந்த புதர்களை வெட்டிப்போட்டு விட்டு விதைகளை விதைத்தார்கள். பூமித்தாய் தன்னைத்தானே புதுப்பித்துக் கொண்டிருந்தாள். ஆதலால், ஓர் ஆண்டு பயிர் செய்தால் பூமித்தாய்க்கு ஆறு ஆண்டுகள் ஓய்வு கொடுத்தார்கள்.

ஆற்றங்கரையில் வாழ்ந்தவர்கள் கால்நடைகளையும் பராமரித்தார்கள். கால்நடைகளை நிலத்திலே படுக்கவைத்தார்கள். கால்நடைகளின் கழிவுகள் நிலத்தில் சேர்ந்தபோது, பயிர் அடிக்கடி நல்ல விளைச்சலைத்தந்தது. பயிர்களை மாற்றி மாற்றிப் பயிர் செய்யவும்ம் கலந்து பயிர் செய்யவும் கற்றார்கள். அப்படிச் செய்யும்போது ஒன்றிரண்டு பயிர்கள் விளையாது போனாலும், மற்றப் பயிர்களால் மக்கள் பசியாறினார்கள். அப்போதும்கூட ஓர் ஆண்டி மாதங்களுக்கு பூமித்தாய்க்கு ஓய்வு கொடுத்தார்கள். பூமித்தாய் எடுத்துக் கொண்டு இருந்த காலத்திலும் கொலுஞ்சி, அவுரி, கிலுகிலுப்பை போன்ற செடிகள் பூமித்தாய்க்கு பச்சைப் பேர்வை போர்த்தி வெயிலைத் தணித்தன.

5,000 ஆண்டுகளாகக் கெட்டுப்போகாத மண் வளம் கடந்த 50 ஆண்டுகளாகப் பாதிப்பைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. விஞ்ஞான வளர்ச்சி ஏற்பட்டுள்ளதாகக் கூறிக்கொள்ளும் மனிதர்கள் இயற்கை தன்னைப் புதுப்பித்துக்கொள்வதை அனுமதிப்பதாக இல்லை. பல விளைச்சல் இழப்பு ஏற்படும் போதெல்லாம் பூமியில் ஏதோ பற்றாக்குறை இருக்கிறது. அதை நிறைவு செய்தால் விளைச்சல் எடுக்கலாம் என்று முடிவுக்கு விஞ்ஞானிகள் வந்தார்கள். அவர்கள் மேல் மண்ணைச் சோதித்துப் பார்த்தார்கள். நைட்ரஜன், பாஸ்பரஸ், பொட்டாஷ் மூன்றில் ஏதோ ஒன்று குறைந்தால் விளைச்சல் பாதிக்கப் படுகிறது என்று அதை அதிக அளவில் மண்ணுக்குக் கொடுக்க முயற்சி செய்தார்கள். அதன் விளைவு, வேறு ஏதோ ஒரு தனிமம் செடிக்குக் கிட்டாமல் போய்விடுகிறது.

பூமி தன்னைத்தானே புதுப்பித்துக் கொள்வதற்கு வாய்ப்பு அளிப்பதற்குப் பதிலாக, விஞ்ஞானி பூமித்தாய்க்கு வைத்தியம் பார்க்க முயலும் போதெல்லாம் பூமித்தாயின் ஆரோக்கியம் சிதைகிறது. பூமித்தாயின் ஆரோக்கியம் குறையும்போது, முளைத்து வளரும் பயிரின் ஆரோக்கியமும் குறையும். விளைந்த பொருளை உண்ணுபவர்களுடைய ஆரோக்கியமும் சிதையும். நிலம், உணவு, ஆரோக்கியம் இவை ஒவ்வொன்றைப்பற்றியும்

பேசுவதற்கு ஆயிரக்கணக்கில் நிபுணர்கள் உண்டு. ஆனால், இவைகளுக்கிடையில் உள்ள இணைப்பைப்பற்றி சிந்திக்கின்ற ஆட்கள் குறைவாக இருக்கிறார்கள்.

நமது கண்ணுக்கு முன் உள்ள மண்ணில் விழுந்தவற்றை உண்டதால்தான் குழந்தையாக இருந்த நாம் 50 கிலோ, 60 கிலோ, 70 கிலோ எடையுள்ள மனிதர்களாக வளர்ந்து நிற்கிறோம். அப்படியானால் இந்த நிலத்தையும், நீரையும், காற்றையும் நாம் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டாமா? எட்வர்டு ஃபாக்னர் என்ற அமெரிக்கர் 1959ஆம் ஆண்டு இது பற்றி எழுதியிருக்கிறார். அவர் அப்போதே உழுவது, நீர் பாய்ச்சுவது, ரசாயனங்கள் இடுவது அனைத்தையும் நிறுத்திவிட்டு

சோதனை செய்து பார்த்தார். முதல் நான்கு ஆண்டுகளில் விளைச்சல் மனநிறைவைத் தரவில்லை. இருந்தாலும் அவர் தயக்கமில்லாது சோதனைகளைத் தொடர்ந்தார். ஐந்தாவது ஆண்டு ஒரு ஏக்கர் நிலத்தில் தக்காளி விளைந்தது கண்டு ஆச்சரியப்பட்டார். அப்போது போதிய அளவு ஓய்வு கொடுத்தால் ரசாயன உப்புகளைக் கொட்டிக் கொடுக்கப்பட்ட நிலம் தன்னைத்தானே புதுப்பித்துக் கொள்ளமுடியும் என்ற நம்பிக்கை அவருக்கு வந்தது.

தண்ணீர் பற்றாக்குறை கூட அடிக்கடி பேசப்படுகிறது.

தண்ணீருக்காக அக்கம்பக்கம் உள்ள மக்கள் மோதிக்கொள்வதும் அதிகம். உப்பைத் தின்றவன் தண்ணீர் குடிப்பான் என்று பழமொழி ஒன்று உண்டு. உப்பு உரங்கள் போடப்படாத நிலங்களில் ஈரம் இருந்தாலே விளைச்சல் இரண்டு மடங்கு, மூன்று மடங்கு உயருகிறது என்பது இன்று யதார்த்தமாக மாறியுள்ளது. பயிர், மழையை மட்டும் நம்பியிருக்கும்போது தனது நீர்த்தேவையை நிறைவு செய்து கொள்ள வேரானது ஆழமாகவும் அகலமாகவும் பரவி நீரையும், நீரில் கலந்த வேதிப் பொருள்களையும் கிளைக்கு அனுப்புகிறது. நீர் பாய்ச்சுவதன் மூலம் தண்ணீரைச் செடிக்குத் தாராளமாகக் கொடுக்கும் போது நீர் தேடும் வேரின் முயற்சி தடைபட்டு போகின்றது. மேலும், நிலத்தின் மேற்பரப்பில் உள்ள

வேதிப்பொருட்கள் தண்ணீரால் கீழ் நோக்கி எடுத்துச் செல்லப்படுகிறது. ஆக மொத்தம் விஞ்ஞான வளர்ச்சி என்ற பெயரில் இயற்கையை வெல்வதற்காக மனிதர்கள் எடுத்த முயற்சி ஒட்டுமொத்த மனித சமுதாயத்தையும் நோயாளியாக மாற்றியுள்ளது.

இன்று உலகம் முழுவதும் உணவுப் பற்றாக்குறை. இதனால், பல நாடுகளில் கலவரங்கள் நடக்கின்றன என்று செய்திகள். பூமித்தாய் கொடுக்காததால் பற்றாக்குறை இல்லை, பூமித்தாய் கொடுத்த தானியங்களைக் கால்நடைத் தீவனமாக்கி, கால்நடைகளை இறைச்சிக்கான மூலப்பொருளாக மாற்றுவதால் மனிதர்களுக்கு உணவுப்பற்றாக்குறை வந்தது. உலகில் விளையும் தானியங்களில் 48% கால்நடைத் தீவனமாக மாற்றப்படுகிறது. கால்நடைகள் புல்லையும், இலை தழைகளையும் உண்டு வாழக்கூடியவை. இன்றும் காட்டில் வாழும் உயிரினங்கள் வலுவோடும், பொலிவோடும் காட்சியளிக் கின்றன. மனிதர்கள் உண்ண வேண்டிய உணவை கால்நடைகளுக்கக் கொடுத்ததால் அவை ஆரோக்கியமாக இல்லை. கழிவுகளை உண்ண வேண்டிய தாய்க்கு ரசாயனங்களைக் கொடுத்ததால், நமது தாயும் ஆரோக்கியமாக இல்லை. தமிழர்கள் பெரும்பாலும் அரிசிச்சோறு உண்ணுபவர்கள். ஆரோக்கியம் இழந்த மண்ணில் விளைந்த அரிசியை ஆரோக்கியமற்றதாக மாற்றியதால் 10-ல் 4 பேருக்கு நீரிழிவு நோய்.

காடுகளை அழித்து தொழிற்சாலைகளும், சாலைகளும் அமைத்தால் வானம் பொழியவில்லை. மனிதர்கள் உண்ணும் உணவும் சத்துள்ள இல்லை. ஆதலால், குறைந்த எடையுடன் குழந்தை பிறக்கிறது. உடல்நிலை குறைவோடு குழந்தைகள் பள்ளிக்குச் செல்கிறார்கள். இவை அனைத்தும் நமக்கு உணர்த்துவது ஒன்றுதான். பூமிக்க ஆரோக்கியத்தை அழித்து பூமியின் குழந்தைகள் ஆரோக்கியமாக முடியாது!

……………….

# மாற்றுப் பாதை!

"ஆராமுதுக்கு ஆசைகொண்டார்-கள்ளில்

அறிவைச் செலுத்துவரோ" என்று பாரதியார் பாடினார்.

"வீர சுதந்திரம் வேண்டி நின்றார்பின்னர் வேறொன்றும் கொள்வாரோ" என்றும் அவர் பாடினார்.

ஆனால் இன்று நடப்பனவற்றைச் சீர்தூக்கிப் பார்த்தால் 'அப்படி யெல்லாம் கூடச் செய்வார்களா' என்றுதான் நம்ப வேண்டியுள்ளது. பூமித்தாய்க்குக் காய்ச்சல் கூடுவதால் பல்வேறு தொல்லைகளுக்கு ஆளாகிறாள். அண்மையில் சீனாவில் நிலநடுக்கம் ஏற்பட்டபோது 1,500 பேர் புதைந்து போனார்கள். சீனநாட்டு தலைமை அமைச்சர் காயமடைந்த பத்தாயிரம் பேரை பார்த்து ஆறுதல் கூறினார். பூகம்பம் பாதித்த ஜீகு என்ற நகரில் 85 விழுக்காடு வீடுகள் தரைமட்டமாகி விட்டன. பெற்றோர்களை இழந்த குழந்தைகளுக்குப் புதிய பள்ளிக் கூடம் கட்டித் தருவோம் என்று தலைமை அமைச்சர் வாக்குறுதி கொடுத்துள்ளார். யாராயிருந்தாலும் அதற்கு மேல் என்ன செய்ய முடியும் என்று நமக்கும் தெரியவில்லை. ஆனால் இந்தியாவில் இதுபோன்ற சிக்கல்கள் குறித்தெல்லாம் பேசுவதற்கு ஆட்கள் இருப்பதாகவே தெரியவில்லை. காலாவதியாகிப் போன மாத்திரைகளை, தேதி மாற்றி அச்சிட்டுக் கொள்ளை லாபம் குவித்த கம்பெனிகளுக்கு மக்கள் நலத்தின் மேல் அக்கறை இருக்க வாய்ப்பில்லை. பலப்பல ஆயிரம் ஆண்டுகளாக சித்தர்கள் வாழ்ந்த பூமி இது, யோகப் பயிற்சியின் மூலமாகவே நோய்களைக் களைய முடியும் என்பதை உலகம் அறிந்தும் இருக்கிறது. ஆனால் இந்தத் தெளிவு மக்களைச் சென்றடையாதது எதனால்?

ஒரு பெரிய பணக்காரர் ஒருவரை காவல்துறையினர் கைது செய்து கொண்டு வந்தார்கள். அவர் 1,500 கிலோ தங்கம் வைத்திருந்ததாக தகவலும் பரவியது. அவ்வளவு தங்கக் செய்யமுடியும் என்பதை நம்மால் யூகம்

செய்யக்கூடமுடியவில்லை. இந்த மனிதர் சாதாரண மனிதரல்ல. மருத்துவக் கல்லூரிகளுக்கு அனுமது வழங்கும் பொறுப்பில் இருப்பவர். அனுமதி வழங்கியவர் கோடி கோடியாகச் சம்பாதிக்கிறார் என்றால் வாங்கியவர்கள் எப்படிச் சம்பாதிப்பார்கள்? அப்படிப்பட்ட நிறுவனங்களில் படித்து வெளியே வருபவர்கள் மனித நலத்தின் மீது அக்கறை காட்ட முடியுமா என்ற கேள்விகளெல்லாம் எழுகின்றன

நமது பட்டணங்களுக்கு மேலே எங்கெல்லாம் கரி மூட்டமாக உள்ளது. ஐரோப்பாக் கண்டத்தில் வானத்தில் சாம்பல் மூடிக்கொண்ட போது 17 ஆயிரம் போக்குவரத்துக் கம்பெனிகள் ஒரு வாரம் நாம் கிடந்தன. இப்படி காற்றும், வான்வெளியும் மாசுபடுவதற்கான காரணம் என்னவென்று பயணிகளோ, பயணத்திற்கு ஏற்பாடு செய்தவர்களோ சிந்தித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை.

திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள காடுகளை ஒரு பிரான்ஸ் நாட்டுச் கம்பெனி வந்து அழித்துக் கொண்டிருக்கிறது. உள்நாட்டு அனுமதி பெறாமல் இப்படி நடப்பது சாத்தியமில்லை என்று நாம் அறிவோம். சுற்றுவட்டார மக்களுக்கு மூலிகையும், விறகும், மூச்சுக்காற்றும், தீவனமும் தந்து கொண்டிருந்த காடுகளை அழித்துவிட்டு எதை அடைவதற்கு நாம் திட்டம் போடுகிறோம்? திருவள்ளூர் மாவட்டத்தில் செங்கல் அறுக்கும் தொழிற்சாலை லாபகரமாக நடைபெறுகிறது. அங்கு தயாரிக்கப்படும் செங்கற்களைக் கொண்டுதான் சென்னை பட்டணத்து மாளிகைகள் வானத்தை உரசிப் பார்க்கின்றன. அந்த செங்கல் சூளைகளில் பணிபுரிபவர்களின் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தருவதாகப் பெருமைப்பட்டுக்கொண்டது. ஆனால் அந்த குழந்தைகளும், பெற்றோர்களும் தங்கள் சீமையில் பிழைப்பதற்கு வழியில்லாமல் ஒரிசா மாநிலத்திலிருந்து தமிழ்நாடு வந்தவர்கள் என்று தெரியவருகிறது.

அடுத்து ஒரு தகவல் வருகிறது. குழந்தைகள் திருவள்ளூர் மாவட்டத்தில் செங்கல் சூளைகளில் கொத்தடிமைகளாக

வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். அவர்களை மாவட்ட ஆட்சித்தலைவர் தீவிர நடவடிக்கை எடுத்து விடுதலை செய்திருக்கிறார்.

மான்சாண்டோ என்ற அமெரிக்கக் கம்பெனி பி.டி. பருத்தி விதையை நாடெங்கும் விற்றது. பருத்திக்காயை புழு சேதம் செய்கிறது. பி.டி. பயிர் செய்தால் காயைத் தின்னும் புழு செத்துப்போகும் 100 கிராம் விதையை ஏறத்தாழ 2000 ரூபாய்க்கு விற்று பணம் சேர்த்தது.

இப்போது மான்சான்டோ கம்பெனி ஒரு உண்மையை ஒத்துக் கொண்டுள்ளது. அதாவது பி.டி. பருத்திக்காயை தின்ற இந்திய பருத்திக் புழு சாகவில்லை. குஜராத் மாநிலத்தில் நான்கு மாவட்டங்களில் பருத்தி காய்ப்புழு பி.டி. பருத்திக்காயை வெற்றிகரமாகத் தின்று தீர்த்தது.12 ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு தொழில்நுட்பம் தோற்றுப் போனது தெரியவருகிறது. இப்படித்தான் பி.டி. கத்திரி, பி.டி. தக்காளி, அரிசி, பி.டி. உருளை இப்படி எதுவானாலும் நடக்கவிருக்கிறது.

உண்மைகளை விஞ்ஞானிகள் கூட ஒத்துக்கொள்ளத் தயங்குவது என் கேள்விக்கு விடையில்லை. கம்பெனி 400 கிராம் முட்டைகோஸ் விதை வாங்கினால் ஒரு கை (டார்ச்) விளக்கு இனாமாகத் தருகிறோம் என்று விளம்பரம் செய்கிறது. ஆசை காட்டி பணம் பறிப்பவர்களுக்கு சுதந்திரம் இருக்கிறது. அதை மறுப்பவர்களைத் தண்டிப்பதற்கு சட்டம் வருகிறது. நாடெங்கிலும் பற்றாக்குறையாகக் காணப்படும் பொருள் தண்ணீர். மனித தேவையில் காற்றுக்கு அடுத்த இடத்தைப் பிடித்திருப்பது தண்ணீர். வேளாண்மையில் பயன்படுத்தும் ரசாயன உரங்களும், ரசாயனப் பூச்சிக்கொல்லி நஞ்சுகளும், ரசாயன களைக் கொல்லி நஞ்சுகளும் வரம்பு கடந்து நிலத்தில் கொட்டப்படுகின்றன.

இதற்கு அறிஞர்கள் பரிந்துரை செய்கிறார்கள். அண்மையில் வந்த பத்திரிகைச் செய்தி சொல்கிறது. பூச்சிகளை வளர்ப்பதே பூச்சிக்கொல்லிகள்தான். நன்மை செய்யும் பூச்சிகள் நஞ்சு தெளித்து அழிக்கப்படுவதால்

தீமை செய்யும் பூச்சிகள் பெருக்கம் அடைகின்றன. இயற்கையில் பூச்சிகளை உண்ணும் இரை உண்ணிகள் ஏராளம் இருக்கின்றன.

விஞ்ஞானிகள் கூறும் கணக்குப்படி 10 விழுக்காடு பூச்சிகள் செடிகளைச் சிதைக்கின்றன. 90 விழுக்காடு பூச்சிகள், செடியைச் சிதைக்கும் பூச்சிகளை உண்ணுகின்றன. அப்படியிருக்க பூச்சிக் கொல்லிகளைத் தெளித்து உணவையும் நஞ்சாக்கி, உயிரின பன்மயத்தையும் சிதைப்பதற்கு எதற்காக உழைப்பையும், பணத்தையும் நாம் இவ்வளவு செலவழிக்கவேண்டும்? இந்தக் கேள்விக்கும் பதில் இல்லை. பட்டணங்களில் குவிந்து கிடக்கும் குப்பைகளை அப்புறப்படுத்துவதற்குப் போதிய வசதி வாய்ப்புகள் இல்லை. ஆனால் கிராமங்களைச் சிதைத்து, பட்டணங்களையே விரித்துக் கொண்டு போவது எதற்காக? கிராமப்புறத்து மண்ணையும், தண்ணீரையும், உணவையும் பட்டணத்திற்கு நகர்த்தி உணவிற்கு நாம் எப்படி உத்திரவாக போகிறோம்? |

அண்மையில் வந்த தகவல், இந்தியாவில் உள்ள வறுமையை உலகம் கவனித்துக் கொண்டுள்ளது. கிராமப்புறங்களில் உள்ளவர்கள் ஒருநாளைக்கு 13 ரூபாயும், பட்டணத்தில் இருப்பவர்கள் ஒரு நாள் 19 ரூபாயும் வருமானம் ஈட்ட முடியுமானால், அவர்கள் வறுமை கோட்டிற்கு மேலே உள்ளவர்கள் என்று புள்ளி விவரம் கூறுகிறது. அந்த வகையில் பார்த்தால் கிராமப்புறத்தில் 28 விழுக்காடு மக்களும் பட்டணத்தில் 26 விழுக்காடு மக்களும் வறுமைக்கோட்டிற்கு கீழே வாடுகிறார்கள், அதாவது உயிரைக் கையில் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. இப்படி சமூகத்தை அச்சுறுத்தும் நிலைமைகளை மாற்றுவதற்கு ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு மாற்றுப் பாதையைத் தேர்ந்தெடுப்பது நல்லது.

………………

## கோரப் பசிகொண்ட விலங்கு !

ஜூன் மாதம் ஐந்தாம் தேதி, உலக சுற்றுச்சூழல் தினம்! அன்று உலகம் முழுவதும் சுற்றுச்சூழல் குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் பல நிகழ்வுகள் நடந்தன.

அமெரிக்க நாட்டில் இருந்து வெளிவரும் நியூ சைன்டிஸ்ட் என்ற பத்திரிகை. வளர்ச்சி என்ற பெயரில் இந்த புவிக்கோளம் கொல்லப்படுகிறது என்பது குறித்து சில கட்டுரைகளைத் தொகுத்து 2008-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஒரு சிறப்பு வெளியீடு கொண்டு வந்தது. ஏன் நமது பொருளாதாரம் புவிக்கோளத்தை கொலை செய்கிறது? நாம் அதற்கு என்ன செய்ய முடியும் என்ற கேள்வியை எழுப்பிய படைப்பு!

நமது புவிக்கோளம் தொடர்ந்து பல நெருக்கடிகளைச் சந்தித்து வருகிறது. இயற்கை ஆதாரங்களை நுகர்வது 1950-க்குப் பிறகு செங்குத்தாக உயர்ந்துள்ளது. அதே அளவு உயிரியல் பல்வகைகளும் அழிந்த வண்ணம் உள்ளன. பூமி சூடாவதைத் தவிர்ப்பதற்கு நம்மால் முயன்ற அனைத்தையும் செய்தாக வேண்டும் என்ற தேவை இருப்பதை யாரும் மறுக்க முடியாது. புகை வெளியேற்றத்தைத் தடுக்கவேண்டும். புதுப்பிக்கக்கூடிய வளர்ச்சித் தொழில்நுட்பத்தைக் கைக்கொள்ள வேண்டும் என்று உணர்கிறோம்.

ஆனால், பூமியைக் காப்பதற்கு நாம் எடுக்கின்ற நடவடிக்கைகள் போதுமானதாக இருக்கிறதா? சுற்றுச்சூழல் குறித்த விஞ்ஞானிகளின் கருத்துப்படி, தேசங்கள் வளர்ச்சி என்ற பெயரில் இன்று போய்க் கொண்டிருக்கின்ற பாதை தொடரும் வரை, தனிமனித முயற்சிகள் ஒன்றும் பெரிதாகச் சாதித்து விட முடியாது. பொருளாதார அமைப்பு வளர்ச்சி என்ற கண்ணோட்டத்தில் இருந்து மாற்றி அமைக் வேண்டியது மிகவும் முக்கியம்.

எர்மன் டேலி ஒரு சுற்றுச்சூழல் பொருளியல்வாதி. இவருடைய கருத்து ஆழமானது. "நாம் ஒரு பேரழிவுக்கான பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம்" என்கிறார் டேலி. பொருளாதார நிபுணர்கள் பூமியில் உள்ள

ஆதாரங்கள் ஒரு வரம்புக்கு உட்பட்ட என்பதை மறுக்கிறார்கள். இப்படி ஒரு நிலை இருக்கிறவரை, நாம் நிலைத்து நீடிக்கவல்ல பொருளாதாரத்தை எட்டப்போவது கிடையாது. ஒரு முடிவான நெருக்கடியைத் தவிர்க்கப்போவதும் கிடையாது.

டேலி சொல்லியுள்ள மற்ற கருத்துக்களைப் பார்ப்போம். "இந்த பூமித்தாயின் அளவு மாறக்கூடியது அல்ல. பரப்பளவில் ஆனாலும், எடையில் ஆனாலும் பூமித்தாய் சுருங்கப்போவதோ, விரிவடையப் போவதோ இல்லை. சக்தி குறித்த உண்மையும் இதுவே. எவ்வளவு சக்தியைத் திருப்பி அனுப்புகிறது. தண்ணீர், நிலம், காற்று, தாதுக்கள் மற்றும் இதர வாழ்வாதாரங்கள் நாம் வாழும் பூமியில் ஒரளவில் உள்ளன. அண்மைக் காலத்தில் பொருளாதார வளர்ச்சி மிகப் பெரிய அளவில் ஏற்பட்டிருப்பது முக்கியத்துவம் வாய்ந்தது. என் ஆய்வுக் காலத்தில் மக்கட்தொகை மும்மடங்கு உயர்ந்துள்ளது. கால்நடைகள், வாகனங்கள், வீடுகள், குளிர்சாதனப் பெட்டிகள் போன்றவைகூட மிகப் பெரிய அளவில் அதிகரித்துள்ளன. பூமித்தாய் நிலைத்திருக்கவல்ல திறமைக்கும் கூடுதலாக நமது பொருளாதாரம் வளர்ந்த வண்ணம் உள்ளது. வாழ்வாதாரங்கள் குறைந்த வண்ணம் உள்ளன. கழிவுகள் குவிந்தவண்ணம் உள்ளன. எஞ்சி இருக்கின்ற இயற்கை வளங்கள் இன்றைய பொருளியல் வளர்ச்சிக்கு ஈடுகொடுக்க முடியாது.

பொருளாதாரம் ஒரு கோரப் பசிகொண்ட பெருவிலங்காக உருவெடுத்துள்ளது. அத்தியாவசியத் தேவையான மரங்கள், சக்தி தரக்கூடிய நிலக்கரி, மீன் போன்றவற்றை உட்கொள்ளுகின்றன கழிவுகளையும் கரிக்காற்றையும் உமிழ்கின்றன. நீரை, நிலத்தை காற்றை, நச்சுப்படுத்துகின்றன. பசி மிகுந்த பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து நுகர்வதற்கு இயற்கை ஆதாரங்கள் அருகிவருகின்றன கழிவுகளைச் சுமப்பதற்கும் புலிப்பரப்பு குறைந்து வருகிறது. இன்னும் 25 ஆண்டுகளுக்கு மேல் இதே பாதையில் செல்ல முடியாது என்பதை பொருளியல் மேதைகள் கணக்கில் கொள்வது நல்லது."

“மக்களுடைய வறுமை மறைவதற்கு பொருளியல் வளர்ச்சி தேவைப்படுகிறது என்று சொல்லப்படும் கருத்தில் உண்மையில்லை " என்கிறார் ஆண்ட்ரோ சிம்ஸ். உலக வங்கி வரைந்திருக்கும் வறுமை கோட்டுக்குக் கீழே உள்ளவர்கள் வாழ்க்கையை உயர்த்துவதற்கு பொளாதார வளர்ச்சி துணை செய்கிறதா?

80-களில் உலகப் பொருளாதாரம்100 டாலர் உயர்ந்தால், அதில் 2.2 மட்டுமே ஏழை மக்களைச் சென்றடைந்தது. 90 களில் இது 60 சென்ட் என்ற அளவுக்குச் சென்றது. இது வறுமைப்பட்டவர்களை

மேலும் வறுமைக்குள் தள்ளுகிறது. செல்வந்தர்களை மேலும் செல்வந்தர்களாக உயர்த்துகிறது. உலக பொருளாதாரம் 166 டாலர் உயருமானால், ஒரு நாளைக்கு ஒரு டாலர் வருவாய் உள்ளவர்கள் 2 டாலர் வருவாய் பெறுவார்கள். ஆனால், இதற்காக எவ்வளவு ஆதாரங்கள் தேவைப்படும் என்று நினைத்துப்பார்ப்பதும் அவசியம். பூமியில் உள்ள எவ்வளவு ஆதாரங்களை நுகர்ந்து, அவற்றைக் கழிவுகளாக மாற்ற வேண்டிவரும் என்பதைப் பார்ப்போம்.

1985-ஆம் ஆண்டிலிருந்து நுகர்வது அதிவேகமெடுத்தது. 2008-ஆம் ஆண்டு செப்டம்பர் 23-ஆம் தேதிக்குள் ஆண்டு முழுவதற்குமான நகர்வுகள் தீர்ந்துபோயின. இங்கிலாந்தில் வாழும் ஒருவர் போல உலகத்தவர்கள் வாழ முற்பட்டால், ஒரு பூமித்தாய் போதாது. மூன்று பூமித்தாய் தேவைப்படும். அமெரிக்கர்கள் போல 700 கோடி மக்களும் வாழ்வதானால், ஐந்து புவிக்கோளம் தேவைப்படும். இன்றைய பொருளாதார வளர்ச்சிப்போக்கில் ஏழையின் வருவாய் சிறிதளவு உயர வேண்டுமானால், பணக்காரர் வருவாய் பன்மடங்கு உயர்ந்ததாக வேண்டும். மிகவும் ஏழையாக இருக்கும் ஒருவர் ஒரு நாளைக்கு மூன்று டாலர் வருவாய் பெற வேண்டுமானால் 15 புவிக்கோளங்கள் தேவைப்படும். வேறு முறையில் சொன்னால், வறுமையை ஒழிப்பதற்கு முன்னால் பூமித்தாயே இல்லாமல் போயிருப்பாள். செல்வந்தர்களை கோடீஸ்வரர்களாக மாற்றுவதற்கு

மாற்றாக ஏழை மக்களின் நிலையை உயர்த்த வேண்டுமானால், ஒரு வித்தியாசமான வளர்ச்சிப் பாதை நமக்குத் தேவைப்படுகிறது.

டேவிட் சுசுகி ஒரு கனடா நாட்டுக்காரர். அவர் சிறந்த ஓவியரும் கூட. இவரது கூற்றுப்படி, "நாம் வருங்காலக் குழந்தைகளின் சொத்துக்களைச் சூறையாடுகிறோம். இதற்கான விலையை நமது குழந்தைகளும் பேரப்பிள்ளைகளும் கொடுக்க இருக்கிறார்கள். நமக்கு என்று புவிக்கோளத்தில் மற்றும் உயிர்ச் சுழற்சியில் உண்டானவற்றை நுகர்வதோடு ஏன் நிறுத்திக்கொள்ளக்கூடாது?" என்று இவர் கேள்வி எழுப்புகிறார். இப்படிப் பல கேள்விகள், பல இரவுகளில் இவரது தூக்கத்தைத் திருடிக்கொள்கின்றன என்கிறார்.

என்றைக்காவது மனித சமுதாயம் நிலைத்து நீடிக்கவல்ல வாழ்க்கை வாழ்ந்திருக்கிறதா? என்ற கேள்விக்கு டேவிட் சுசுகி இப்படி சொல்கிறார். "மனிதர்கள் ஒரு காலத்தில் வேட்டையாடி கிழங்குகளைத் தோண்டியும் உண்டு வாழ்ந்தார்கள். அன்று அவர்கள் சுற்றுச்சூழலைச் சிதைக்காது வாழ்ந்தார்கள். காரணம், அவர்கள் சுமந்து செல்லக்கூடியவற்றை மட்டுமே வைத்திருந்தார்கள் . கிராமங்களாக வாழத் தொடங்கியது முதல் மனிதர்களைச் சுற்றியுள்ள சூழல் அவர்களின் தேவைகளை நிறைவு செய்ய முடியாமல் போயிற்று . அதனால், அவர்கள் பூமியெங்கும் பரந்து திரிந்து ஆக்கிரமிக்கச் தொடங்கினார்கள். இன்று நெருக்கடியான நிலைமையை உருவாக்க வல்ல, பெரிய எண்ணிக்கையில் உள்ள விலங்காக மனித சமுதாயம் வளர்ந்து நிற்கிறது.

நமது வருங்காலம் என்பது மிகப் பெரிய ஆபத்தை சந்திக்க இருக்கிறது. எனக்கு இப்போது வயது 75, எனக்குப் பிடித்த பொழுதுபோக்கான ஓவியம் வரைதலில் ஈடுபடுவதற்கு மனம் விழைகிறது. ஆனால், ஒரு கவலை என்னை ஆட்டுவிக்கிறது. பின்வரும் நாளில் என் பேரக்குழந்தை என்னைப் பார்த்து, 'தாத்தா நீ வேறு மாதிரி வாழ்ந்திருக்கக்கூடாதா?" என்று கேள்வி கேட்டுவிடக் கூடாதே, அதற்காக நான் போராட வேண்டியுள்ளது!"

உலகச் சுற்றுச்சூழல் தினத்தை முன்னிட்டு நாமும் கூட இப்படிச் சிந்திப்பதும் மற்றவர்களைச் சிந்திக்க வைப்பதும் வருங்காலச் சந்ததிகளுக்கு வாழக்கூடிய பூமியை விட்டுச் செல்வதற்கு ஒரு வாய்ப்பாக அமையும்!

………………..

## வாழ்வின் உன்னதம்!

ஒவ்வோர் உயிரையும் இந்தப் பிரபஞ்சத்தின் ஒரு பகுதியாகத்தான் நான் பார்க்கிறேன். எதையும் புழு என்றோ , பூச்சி என்றோ , தாவரம் என்றோ, ஆண் என்றோ, பெண் என்றோ, இந்தியன் என்றோ, அமெரிக்கன் என்றோ நான் பார்ப்பதில்லை. இந்தப் பிரபஞ்சத்தில் ஒவ்வோர் உயிருக்கும் அதற்கென்று ஒரு இடம் இருக்கிறது. ஒன்று இல்லாமல் மற்றொன்று இல்லை.

நான் காய்கறி விதையை மண்ணில் புதைத்திருந்தேன். நான்கு நாட்கள் கழித்து அது முளைத்து வளரத் தொடங்கியது. இரண்டு நாட்கள் கழித்துச் சென்று பார்த்தபோது, ஒரு பயிர்ச்செடியின் இலையை ஒரு வெட்டுக்கிளி தின்று கொண்டிருந்தது. இன்றோ, நாளையோ, ஒரு ஒணான் அல்லது ஒரு குருவி வரக்கூடும் ... அதற்கு இந்த வெட்டுக்கிளி இரையாக அமையக் கூடும். இப்படி உயிர்கள் ஒன்றையொன்று சார்ந்து வாழ்கின்றன அல்லது ஒன்றின் வளர்ச்சியை மற்றொன்று கட்டுப்படுத்துகின்றன.

இப்படியாக ஒணான், பறவைகள், சிலந்தி, தட்டான், குளவி, பொறிவண்டு போன்றவை பயிரை மேயும் பூச்சிப் புழுக்களைக் கட்டுப்படுத்தவே செய்கின்றன. பூமியில் உயிர் வாழ்க்கை தொடங்கிய நாள் முதற்கொண்டு இப்படி நடைபெற்று வருகின்றன. 1809 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இங்கிலாந்தில் ஒரு குழந்தை பிறந்தது. அவனது பெற்றோர் அவனுக்கு சார்லஸ் டார்லின் என்று பெயர் வைத்தார்கள். சார்லஸ் டார்லின் 1831-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 'பிகிள்' என்ற கப்பலில் உலக யாத்திரை

புறப்பட்டார். கப்பல் பல நாட்கள் பயணித்தது. டார்வின் பலவகை மீன்களைப் பிடித்து பரிசோதனை

செய்தார். கப்பல் தரை தட்டுகிறபோது கீழே இறங்கி நடந்தோ அல்லது குதிரை மீது சென்றோ, தாவர வகைகளைப் பரிசோதனை செய்தார்.

தென் அமெரிக்காவில் பல பாகங்களுக்கும் பிகில் கப்பல் சென்றது அந்த இடங்களில் எல்லாம் டார்வின் பல நாட்கள் தங்கி உள்ள: பழக்க வழக்கங்களை ஆராய்ந்தார். இத்தகைய ஐந்து ஆண்டு பயணத்தின் முடிவில் ஊர் திரும்பிய டார்வின், தனது பரினாம் தத்துவத்தை வெளியிட்டார். உயிரினங்களில் பல வகையான புல். பூண்டு, செடி கொடிகள், மரங்கள் என்று பரிணமித்தது எப்படி நீர் வாழ்வன, ஊர்வன, நடப்பன, பறப்பன, குட்டி போட்டுப் பால் கொடுப்பவை என்று வளர்ச்சி அடைந்தது எப்படி? இவை பற்றியெல்லாம் ஆராய்ந்த டார்வின் பின்பரும் முடிவுக்கு வந்தார். 'உயிரினங்கள் பூகோளா (வேறுபாடுகளாலும் வேறுபட்ட தட்பவெப்ப நிலைகளாலும் பிரிக்கப்படும் போது புதிய இனங்கள் தோன்றுகின்றன என்று டார்வின் குறிப்பிட்டார், வாலில்லாக் குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்று டார்வின் குறிப்பிட்ட போது, பலர் அதை ஏற்க மனம் கூசிப்போனார்கள். ஆனாலும் பிற்காலத்தில் அதுவே பெரிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பாக இருந்தது.

இயற்கை புதியனவற்றைத் தோற்றுவிப்பதும், அவற்றைப் போற்றிப் பாதுகாப்பதிலும் வல்லமை படைத்ததாக இருக்கிறது. இதனை விஞ்ஞானம் காலங்காலமாக மக்களுக்குப் போதிக்க முற்பட்டது. ஆனால் அதே விஞ்ஞானம் வளர்ச்சியடைந்தபோது இயற்கையின் போக்கையும், இயற்கையின் படைப்புகளையும் சிதைத்துக் கொண்டிருக்கிறது. இத்தகைய விஞ்ஞானத்தின் போக்கை உடனடியாகத் தடுத்து நிறுத்தாவிட்டால் இன்னும் சில பத்தாண்டுகளில் பூமியில் உயிர் வாழ்க்கை மிகப் பெரிய அழிவைச் சந்திக்க நேரிடும் என்று விஞ்ஞானிகள் எச்சரிக்கிறார்கள்.

கல்கத்தாவிலிருந்து வெளிவரும் 'பிசினஸ்' செயல் இயக்குனர் அச்சிம்ஸ்டேயினர் இப்படிக் கூறுகிறார். "புதுப்பிக்க முடியாத பேரழிவுகளை இந்த பூமியில் நிகழ்த்துவது தொடருமானால் எப்போதும் போல வணிகம் தொடருவது சாத்தியமில்லாது போய்விடும்" என்று கூறுகிறார், அவர் இப்படி கூறுவதற்குக் காரணம் அவர்கள் எடுத்துப் பார்க்கின்ற புள்ளி விவரங்களே ஆகும். அவர்களது அறிக்கை தூய்மையான நீர் மாசுப்படுத்தப்படுவதையும், நிலவளம் சிதைக்கபடுவதையும், காடுகள் அழிக்கப்படுவதையும், புல் தரைகள் மறைவதையும், கடல்வாழ் உயிரினங்கள் காணாமற் போவதையும் தெளிவுபடுத்துகிறது.

இந்த இழப்புகளால் ஒவ்வொரு ஆண்டும் 4500 கோடி டாலர் இழப்பை உலகம் சந்திக்கிறது என்றும் அறிக்கை கூறுகிறது. 2009-ஆம் - 7000 சதுர துர கிலோ மீட்டர் பரப்பில் இருந்த காடுகள் அழிந்து போயின. புலி, சிறுத்தை, வரிக்குதிரை, ஒட்டகச்சிவிங்கி போன்ற வனவிலங்குகளும், சிட்டுக்குருவி, தவளை போன்ற சிற்றினங்களும் அதிவேக மறைந்துவருகின்றன. செடிகள் மற்றும் விலங்கினங்களில் 5.5 விழுக்காடு ஒரே அடியாக மறைந்து போகக்கூடிய ஆபத்து உள்ளது. காண்டாமிருகம். திமிங்கலம், கொரில்லா, வால்ரஸ்', வண்ணத்துப் பூச்சிகள் என அனைத்தும் அதிவேகமாக மறைந்து வருகின்றன.

1200 நீர்வாழ் பறவைகளில் 44விழுக்காடு மறைந்துவிட்டன. அணைகள், நீர்த்தேக்கங்கள் என்ற பெயரில் 292 ஆற்றுப்படுக்கைகள் சிதைவுக்கு ஆளாகியுள்ளன. வளர்ப்பு விலங்குகள் 7000 வகை உள்ளன. இவற்றில் 21 விழுக்காடு அழிவின் விளிம்பில் இருக்கின்றன. 2000-ம் ஆண்டிலிருந்து கால்நடை இனங்கள் மறைந்து போய்விட்டன.

சீனாவில் 1950-ஆம் ஆண்டு வழக்கிலிருந்த 46,000 நெல் இனங்களில் பல மறைந்து போனதால் 2006-ஆம் ஆண்டு கணக்குப்படி 1000 நெல் இனங்கள் மட்டுமே உயிர் பிழைத்திருக்கின்றன. இதே போக்கு நீடித்தால் 2100-ஆம் ஆண்டில் வாழ்கின்ற மக்கள் பெருமளவில்

வாழ்வாதாரங்களை இழந்து அல்லல்படுவார்கள் என்று அந்த அறிக்கை கூறுகிறது.

இப்படி உயிரினங்கள் மறைந்து வருவதற்கு ஆன்மீக உணர்வு குறைந்து விஞ்ஞானத்தின் மீது தீவிர நம்பிக்கை வைப்பதே அடிப்படைக் காரணம் என்பதை இன்னும் உலகம் ஒப்புக்கொள்ள வில்லை. இந்த உண்மையை பயிர்த்தொழிலில் தாம் பார்க்கிறோம். பல்லுயிர்ச்சூழல் பேணுவதற்குப் பதிலாக கடந்த 50 ஆண்டுகளாக ஓரினப் பயிர் சாகுபடி ஊக்குவிக்கப்பட்டது. இதில் அதிக விளைச்சல் எடுக்க முடியும் என்ற தப்பான எண்ணம் பரப்பப்பட்டது.

வேளாண்மையில் எந்திரங்களும், ரசாயன உரங்களும் பயன்படுத்தப் பட்டன. மண் உயிரிகளின் தேவையும், கால்நடைக்கும் பயிர்த் தொழிலுக்கும் உள்ள உறவும் புறந்தள்ளப்பட்டன. வளமிழந்த மண்ணில் வளர்ந்த வலுவிழந்த பயிர்களை பூச்சிகள் மேயவந்தன. பூச்சிகளைக் கொல்லுவதற்கென்று நஞ்சுகள் உழவர்களுக்கு பரிமாறப்பட்டன,

பயிர்களில் தெளித்தால் மட்டும் போதாது, மண்ணிலும் நஞ்சுகளைக் கொட்ட வேண்டும். பூச்சிகளையும், பூஞ்சானங்களையும், களைச்

செடிகளையும், எலிகளையும் கொல்ல வேண்டும் என்று வரைமுறையில்லாமல் நஞ்சுகளை நிலத்திலும், நீரிலும், பயிர்களின் மீது கொட்டினார்கள். இதன் விளைவாக மனிதர்களோடு ஒன்றி கொண்டு வாழ்ந்த பறவைகள், பூச்சிகளை, பாம்புகளையெல்லாம் இழந்தோம். உண்ணும் உணவு அனைத்தும் நஞ்சாகிப்போனதால் மக்கள் நோயினால் நாளும் பீடிக்கப்படுகிறார்கள். அதற்கு மேலும்கூட இந்த நாடு ஒரு பேராபத்தைச் சந்தித்துள்ளது.

கார்பைடு ரசாயனத் தொழிற்சாலை போபாலில் உருவாக்கப்பட்டது பூச்சிகளைக் கொல்ல நஞ்சு தயாரிப்பதற்காகவே என்று சொல்லி போபால் ஆலை தொடங்கப்பட்டது. ஆனால் 1984-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 2-ஆம் நாள் நள்ளிரவில் நஞ்சு தேக்கி வைக்கட்

பட்டிருந்த தொட்டியில் கசிவு ஏற்பட்டது. 40,000 கிலோ நஞ்சு சேமிக்க பட்டிருந்த தொட்டியில் ஏற்பட்ட கசிவு போபால் நகரத்தைமே சூழ்ந்தது. ஏறத்தாழ போபால் நகர மக்கள் தொகையில் பாதிபேர் பாதிக்கப்பட்டனர்.

25,000 பேர் குழந்தைகளும், பெண்களும், ஆடவரும் உடனடியாக உயிர் நீத்தார்கள். ஐந்து லட்சம் பேர் உடல் ஊனத்தோடு போதிய சிகிச்சை அளிக்கப்படாமல், இழப்பீடு கொடுக்கப்படாமல் 28 ஆண்டுகளாக நடை பிணமாக உலவுகிறார்கள். அணுகுண்டு வெடித்த போது ஏற்பட்ட பேரழிவுக்கு ஒப்பான போபால் நச்சுவாயுக் கசிவு இந்திய அரசாங்கத்திற்கும், மக்களுக்கும் பெரியதொரு அவமானத்தைத் தேடித் தந்துள்ளது. இது போக அந்த நஞ்சுகளைத் தெளித்த நிலப் பகுதிகளில் எல்லாம் உயிரினப் பல்வகைமை பெரும் சேதத்திற்கு ஆளாகியுள்ளது.

போபால் ஒன்று அல்ல. இன்னும் பல போபால்களை இந்தியா சந்திக்க நேரலாம் என்று எழுத்தாளர்கள் எச்சரிக்கிறார்கள். இவையெல்லாம் இயற்கைச் சுழற்சியில் நிகழ்கின்றவை அல்ல, மனிதர்களால் தவிர்க்கப்பட வேண்டியவைகளே! 'இயற்கையை மாற்றி வைக்க நினைப்பதைப் போன்ற முட்டாள்தனம் எதுவும் கிடையாது. இயற்கைதான் எல்லாம் என்று உணர்வதுதான் வாழ்வின் உன்னதம். உழவர்கள் சுய நினைவிற்கு வரவேண்டியது. தவிர்க்கக்கூடிய சீர்திருத்தமாக அமையும். பதவியில் உள்ளவர்கள் தங்களின் பொறுப்புணர்ந்து செயல்படுவதற்கு ஆன்மிகம் துணைபுரியட்டும் என்று வேண்டுகிறோம்!"

……………..….

## சேமிப்புக் கிடங்கு எதற்கு ?

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃது ஒருவன் பெற்றான் பொருள்வைப் புழி - குறள்

பொருள் மிக வைத்துள்ள செல்வந்தர், பசித்தவனுடைய பசியை ஆற்றுவதே பொருள் வைப்பதற்கான சிறந்த இடம்

என்று திருக்குறள் சொல்லுகிறது. 1800 ஆண்டுகளுக்கு முன்பு திருவள்ளுவன் சொல்லி வைத்த இதே கருத்தை. இன்று இந்திய நாட்டின் உச்சநீதிமன்ற நீதியரசர்கள் சொல்லியுள்ளார்கள், நீதியரசர்கள் தால்பீர் பண்டாரி மற்றும் தீபக் வெர்மா இருவரும் தங்களது தீர்ப்பில் இப்படிக் கூறியுள்ளதாக 'இந்து' நாளேட்டில் செய்தி காணப் படுகிறது.

தங்களது தீர்ப்பில் நீதியரசர்கள் உணவு தானியங்கள் உண்ணத்தகாத குப்பையாக மாறுவதைப் பார்த்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, அவற்றை பசியோடு இருப்பவர்களுக்கு அரசாங்கம் வழங்கிவிட வேண்டும் என்று கோரிக்கை வைத்துள்ளார்கள். அரசாங்கத்தின் ஒப்புதல் கேட்டு இந்த ஆணையைப் பிறப்பித்திருக்கிறார்கள்.

அரசாங்கம் உழவர்களிடமிருந்து அவர்கள் விளைவித்த நெல், கோதுமை ஆகிய தானியங்களை கொள்முதல் செய்து சேமித்து வைத்து நியாயவிலைக் கடைகள் மூலம் வசதியற்ற மக்களுக்கு வழங்கி வருகிறது. அப்படிச் சேமிப்பதற்குப் போதுமான, கிடங்குகள் இல்லாமையால், கிடங்குகளிலேயே எலிகளும், பூச்சி, பூஞ்சானங்களும் தின்று உணவு தானியங்கள் குப்பையாகிப் போயின. அப்படி சேதமாகியுள்ள தானியத்தின் அளவு ஒன்றிரண்டு மூட்டையல்ல, 14 ஆயிரம் டன் உணவு தானியம் முறையான கவனிப்பு இல்லாமையால் குப்பையாக உருமாறியுள்ளது. நாடெங்கும் வறட்சி பாதித்து, அதனால் கோதுமை, அரிசி, பருப்பு, எண்ணெய் வித்து போன்று அனைத்து உணவுப் பண்டங்களும் வெளியிலிருந்து இறக்குமதியாகும் இந்த தருணத்தில் இது நிகழ்ந்துள்ளது. இது குறித்து பொதுநல வழக்கு ஒன்று விசாரணைக்கு வந்தபோது, உச்சநீதிமன்ற நீதியரசர்கள் மேலே கண்ட தீர்ப்பை வழங்கியுள்ளார்கள்.

தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்

ஜகத்தினை அழித்திடுவோம்

என்று தேசிய கவி பாரதி பாடினான். இன்று உச்சநீதிமன்ற நீதியரசர்கள் கோடிக்கணக்கான மக்கள் (நாலில் ஒருவர்) பசித்த வயிற்றோடு படுக்கைக்குச் செல்லும் நாட்டில் ஒரு தானியத்தைக் கூட அழிய விடுவது குற்றமாகும். இப்படி பல்லாயிரம் டன் உணவு தானியம் அழிவதற்குக் காரணமாக இருந்தவர்கள் மீது எந்தவித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது என்பது குறித்து ஆகஸ்ட் 10ஆம் தேதிக்குள் தகவல் வரவேண்டும் என்று உச்சநீதிமன்ற நீதியரசர்கள் நடுவண் அரசுக்கு உத்தரவு பிறப்பித்துள்ளார்கள்.

'டெக்கான் கிரானிக்கல்' பத்திரிகையில் மற்றுமொரு தகவல் வெளியாகியுள்ளது. ஓர் ஆண்டுக்கு முன்பாக உணவு தானியங்களை பாதுகாப்பாக சேமிப்பதற்குப் போதிய சேமிப்பு கிடங்குகள் கட்டப்படும் என்று உணவு அமைச்சர் சரத்பவார் பாராளுமன்றத்தில் வாக்குறுதி அளித்தார். உணவு உழவு அமைச்சர் (உலக கிரிக்கெட் ஆட்டக்குழுத் தலைவரும்கூட) சரத்பலார் ஓராண்டிற்கு முன்பு பாராளுமன்றத்தில் அளித்த வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லை. உணவு உற்பத்தி மீதும், அதைப் பாதுகாத்து மக்களுக்கு வழங்குவதிலும் அரசாங்கத்திற்குரிய அக்கறையின்மையை இது காட்டுகிறது.

இன்று பரவலாகப் பேசப்படும் இந்தக் குறைபாடு இந்தியாவிற்குப் புதிதல்ல! இந்திய கிராமங்கள் சுயசார்பு கிராமங்களாக பல்லாயிரம் ஆண்டுகளாக நிலவி வந்தன. கிராமங்களுடைய தேவையை நிறைவு செய்த பிறகு உபரி தானியம் நகரங்களைச் சென்றடைந்துள்ளது. வளர்ச்சி என்பதே நகர்ப்புற வளர்ச்சிதான் என்று அரசாங்கம் முடிவெடுத்த பின்பு கிராமங்களை உண்டு செறித்து பட்டணங்கள் ஊதிப் பெருத்தன. நிறைய மக்களை வேலையற்றவர்களாக மாற்றி பட்டணத்திற்கு கவர்ந்து இழுத்து அவர்களை ஊதாரிகளாக மாற்றியது அரசாங்கத்தின் கொள்கை. இதனால் தற்சார்பு கிராமங்களாக இருந்த இந்தியா, பட்டணங்களுக்குத் தொண்டு செய்யும் கிராமங்களாக மாற்றப்பட்டன. அரசு

ஊழியர்கள் பொதுச்சொத்தின் மீது அக்கறைகாட்டமாட்டார்கள் என்பது எல்லோரும் அறிந்த உண்மைதான். உணவு அமைச்சரே கிரிக்கெட் விளையாட்டின்

மீது ஆர்வம் மிகுந்தவராக மாறி சுமையைக் குறையுங்கள் என்று தலைமை அமைச்சருக்குக் கோரிக்கை வைத்திருக்கிறார். அப்படியிருக்க, எத்தனை கிட்டங்குகள் எழுப்பினாலும் பட்டினி கிடப்பவர் பிரச்சினை தீரப் போவதில்லை.

ஜே.சி. குமரப்பா போன்ற காந்தியவாதிகள் இவை குறித்துக் தெளிவாகவே எழுதியுள்ளார்கள். ஒவ்வொரு சிற்றூரிலும், பேரூரிலும் பங்கு வாழும் மக்களுக்கான உணவு அந்தந்த ஊரிலேயே சேமிக்கப்படவேண்டும். அப்படியானால் இன்று இருக்கும் மிகப்பெரிய சேமிப்புக் கிடங்குகள் கூட தேவையில்லாமல் போய்விடலாம். மற்றொரு செய்தியும் நாளேடுகளில் வெளியாகியுள்ளன. உணவு சானியங்களில் 20 விழுக்காடு போக்குவரத்தின்போதே அழிகிறது. காய்கறி, பழம் போன்றவற்றில் 30 விழுக்காடு போக்குவரத்தின்போதே அழுகி, குப்பையாக மாறுகின்றன. நெற்றி வியர்வை சிந்தி நிலத்தில் பாடுபட்டு உணவை உற்பத்தி செய்யும் உழவர்கள், வரவுக்கும் செலவுக்கும் கட்டுப்படியாகாமல் தற்கொலைக்குத் தள்ளப்படுகிறார்கள். வெங்காயம் முதலாக உருளைக்கிழங்கு ஈராக உணவுப் பண்டங்களின் விலை, விண்ணை முட்டும் அளவிற்கு உயர்ந்து போய்க் கொண்டிருக்கிறது.

சத்துணவுப் பற்றாக்குறையால் குழந்தைகளும், குழந்தைகளைச் சுமக்கும் தாய்மார்களும் பலவிதமான நோய்களுக்கு ஆளாகிறார்கள். இத்தகையதொரு சூழலில் உற்பத்தி செய்யப்பட்ட விளைபொருள்கள் வீணாகிவிடுவது கண்டிக்கத்தக்கது. அதற்கு மதில் மேல் உள்ள கிளைகளைக் கிள்ளுவது போல தீர்வுகள் சொல்லுவது போதுமானதல்ல இந்த நேரத்தில் 30 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்வு நினைவிற்கு வருகிறது.

நெல்லை மாவட்டத்தில் உள்ள களக்காட்டிற்கு நாங்குனேரியிலிருந்து கிளைச் சாலையில் எங்கள் வண்டி திரும்பியது. என் உடன் அமர்ந்திருந்தவர், ஆக்ஸ்பேம் நிதி நிறுவத்தைச் சேர்ந்த ஒரு இங்கிலாந்துக்காரர். அவர் சன்னல் வழியாகப் பார்த்தபோது எழும்பிக் கொண்டிருந்த கட்டிடம் கண்ணில் பட்டது. இது என்ன கட்டிடம் என்று வினவினார். "இந்திய உணவுக் கழகம் எழுப்புகின்ற சேமிப்புக் கிடங்கு'' என்று பதிலுரைத்தேன். அவர் நுனிக்கையால் முன்தலையில் அடித்துக்கொண்டார்.

"உங்கள் நாட்டில் கோடிக்கணக்கானவர்கள் பசியோடு இருக்கும் போது தானியத்தைச் சேமிக்க எதற்காக கோடவுன் எழுப்புகிறீர்கள்?"

இன்று அதே கேள்வி உச்சநீதிமன்றத்திலிருந்து பிறக்கிறது. பசித்தவர்கள் இருக்கும் போது எதற்காக தானியத்தைக் குவித்து வைத்து வீணடிக்கிறீர்கள்?"

சிற்றூர், பெருநகரம் என மக்கள் எங்கெங்கும் வாழுகிறார்கள். ஆனாலும் இன்றும் 65 விழுக்காடு மக்கள் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் வசிக்கிறார்கள். 112 கோடி மக்களுக்கும் உணவு உற்பத்தி செய்யும் மக்கள் தொகுதி இந்த 65 விழுக்காடு மக்கள்தான். அதாவது 73 கோடி மக்களாகும். இவர்களுடைய வாழ்வாதாரங்கள் சிதைக்கப்படுவதாலும், விளைநிலங்கள் உணவு உற்பத்தி சாராத பிற தொழில்களுக்கு மாற்றப்படுவதாலும் நாட்டின் உணவுக்கான உத்திரவாதம் கேள்விக்குறியாகியுள்ளது. இந்த 73 கோடி மக்கள் 5 லட்சம் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் வசிக்கிறார்கள். இந்த சிற்றூர்களும், பேரூர்களும் நீர் வசதி, நிலவளம், வனவளம் காப்பாற்றப்படுவதன் மூலம் மேம்பாடு அடையுமானால், இந்த ஊர்கள் பட்டணத்தைச் சார்ந்திராமல் தற்சார்பு சமூகமாக மாறுமானால் இந்திய நாட்டிற்கு மகாத்மா காந்தி சொன்னது போல வளம் திரும்புவதாக நாம் கருதமுடியும்.

……………………………..

# ஒரு கல்லை எடுத்துப்போடுங்கள்!

ஊடகங்களில் வருகின்ற தகவல்கள், சிந்திக்கின்ற மனித சமூகத்தைக் கவலைக்குள் ஆழ்த்துகிறது. இயற்கை, மனித நலத்திற்கு விரோதமாகச் செயல்படுகிறது. இயற்கைக்கு விரோதமாக இருந்த மனிதனுடைய செயல்பாடுகள் இன்று மனிதனுக்கு எதிராகத் திரும்புகிறது. இப்படி நடக்கும் என்று உலகம் முழுதும் இருந்து சான்றோர்கள் சொல்லத்தான் செய்தார்கள். ஆனால் உலகமே அதற்குக் காது கொடுக்கத் தயாராக வில்லை. இன்று பேரழிவுகளை உலகம் எதிர்கொள்கிறது. இதில் ஏழை, பணக்காரர் வேறுபாடு காணமுடியாது. தமிழ்நாட்டுக் கடற்கரை ஓரங்களில் ஆழிப்பேரலை எழுந்தபோது இதனைப் பார்த்தோம். சாதி, சமயம். ஏழை, பணக்காரர் எதுவும் இதற்கு விதிவிலக்கல்ல.

2005-ஆம் ஆண்டில் இமயமலைப் பகுதியில் பூகம்பம் நிகழ்ந்தபோது, இதே நிலைமையை நாம் காணமுடிந்தது. இன்று சீன நாட்டு ஆறுகளில் பெரும் வெள்ளம்! மக்கள் உயிர்களையும், உடைமை களையும் இழந்து தவிக்கிறார்கள். சீன நாட்டில் நாகரீகம் என்ற பெயரில் எழுப்பப்படுகின்ற தொழிற்சாலைகளும், நெடுஞ்சாலைகளும், சாலைகளில் ஓடும் வாகனங்களும் விண்வெளியைச் சூடாக்குவதால் திபெத்தில் உள்ள பனிப்பாளங்கள் உருகி ஓடுகின்றன. இதனால் இந்தியாவில் வேளாண்மை பாதிக்கப்படும் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இமயமலையின் இந்தியப் பகுதியில் இருக்கும் எல்லையோர பகுதி 'லே' என்று அழைக்கப்படும். இங்கு மழை மிக மிக அரிது. வெப்பமானியில் பூஜ்ஜியம் டிகிரிக்கும் கீழே இறங்கும் அளவிற்கப் பனிப்பொழிவு அதிகமாக இருப்பதுதான் வழக்கம். அனால் இந்த ஆண்டு மேகம் இடித்து மழை கொட்டியபோது நூற்றுக்கணக்கானவர்கள் உயிழிழந்தார்கள். நூற்றுக்கணக்கானவர்கள் காணாமல் போனார்கள், நூற்றுக்கணக்கான வீடுகள் வயர்

ஆயிரக்கணக்கானவர்கள் ஊனமுற்றார்கள். இந்த இயற்கைச் சீற்றத்தில் அடிப்படைக் காரணம் எது?

டெல்லி மாநகரத்தில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. டெல்லி மாநகரத்துச் சாக்கடையாக இருந்த யமுனை நதி சுத்தப்படுத்தப்பட்டது என்று பலரும் மகிழ்ச்சியடைந்தார்கள். ஆனால் ஹரியானாவில் வெள்ளம் பெருகி அங்கு அணை உடைந்து விடக்கூடாதே என்பதற்காக திறந்துவிட்டார்கள். யமுனை நதியில் மிகுந்த தண்ணீர் டெல்லி மாநகரத்திற்குள் புகுந்து வெள்ளக்காடாக மாற்றியது. பாகிஸ்தானில் விடாது பெய்த மழையால் ஆறுகள் ஊருக்குள் புகுந்ததால் இரண்டு கோடி மக்கள் துன்பத்திற்கு ஆளாகியுள்ளார்கள். 'வெள்ளப் பாதிப்பைச் சீர் செய்ய மூன்று ஆண்டுகள் ஆகலாம்' என்று அந்த நாட்டு அதிபர் அறிக்கை வெளியிட்டுள்ளார். பாகிஸ்தான் பேரழிவைப் பார்த்து வந்து ஐக்கிய நாடுகள் சபை பொதுச் செயலாளர் பான் கீ மூன், தனது வாழ்க்கையில் இப்படி ஒரு கொடூரமான நிகழ்வை தான் கண்டதில்லை என்று துயரம் தோய்ந்த குரலில் பேசியுள்ளார்.

அமெரிக்க நாட்டில் காடுகள் தீப்பற்றி எரிகின்றன. ருஷ்ய நாட்டில் வரலாறு காணாத வறட்சி. ஆஸ்திரேலிய நாட்டிலும் அப்படியே. பிலிப்பைன்ஸ் நாட்டில் எரிமலை 400 ஆண்டுகளுக்குப் பிறகு வெடித்துப் பரவத் தொடங்கியுள்ளது. இவையெல்லாம் உலகம் விடுத்த எச்சரிக்கையை பல நாட்டு அரசாங்கங்களும் அலட்சியப்படுத்தியதால் வந்த விளைவு, முன்கூட்டியே எச்சரிக்கை விடுத்த இரண்டு மனிதர்களை நாம் நினைவுகூற வேண்டியது பொருத்தமாக இருக்கும்.

முதலாவதாக 1990ம் ஆண்டு ஐக்கிய நாடுகள் சபையினுடைய பொதுச்செயலாளர், "பூமி சூடாவதும் ஓசோன் திரையில் ஓட்டை விழுவதும், நதிகளில் ஓடும் நீர் மாசுபடுவதும். அதனால் தொற்று நோய்கள் பரவுவதும் மனித சமூகத்தை அச்சுறுத்தி வரும் சிக்கல்கள். அரசாங்கங்களின் கவனம் இந்தப் பக்கம் திருப்பிவிடப்பட வேண்டும்" என்று கூறியிருந்தார். கி.பி. 2000 வாக்கில்

ஜப்பானிய விஞ்ஞானி மசானபு புகாகோ அமெரிக்க நாட்டிற்குப் போய்விட்டு திரும்பிய பிறகு அவருடைய கருத்துக்கள், 'இயற்கைக்குத் திரும்பும் பாதை' என்ற தலைப்பில் நூல் வெளிவந்தது. அதில் அவர் அமெரிக்காவில் மூன்றில் ஒரு பங்கு நிலப்பரப்பில் பயிர்த் தொழில் நடைபெறுகிறது. இதற்காக 100 அடிக்குக் கீழிருந்து தண்ணீர் உறிஞ்சப்படுகிறது. அதனால் கடல் நீர் நிலத்திற்குள் நுழைகிறது. உப்பு நீரை மேலே உறிஞ்சி நிலத்தில் தெளிப்பதால் அமெரிக்காவில் வேளாண்மை நடைபெறும் மூன்றில்

ஒரு பங்கு நிலப்பரப்பு நிலம் பாலை நிலம் ஆகிக்கொண்டுள்ளது.

இப்படி நடைபெறுவது அமெரிக்காவில் இருப்பவர்களுக்கு தெரியாது. ஏனென்றால், அமெரிக்கக் கிராமங்களில் நூற்றில் இருவர்தான் வசிக்கிறார்கள். நாம் அமெரிக்கப் பாதையைப் பின்பற்றப் போகிறோம்? ஆசியப்பாதையைப் பின்பற்றப்போகிறோமா? என்ற கேள்வியை எழுப்பியிருந்தார் மசானபு. இன்னொரு கருத்தையும் வெளியிட்டிருந்தார்.

அமெரிக்கப் பாதையை உலகம் முழுவதும் 50 ஆண்டுகளுக்குப் பின்பு இந்த பூமி இருக்காது. இது குறித்து மூன்று ஆண்டுகளுக்குள் உலகம் ஒரு முடிவுக்கு வரவேண்டும். இல்லாவிட்டால் பேரழிவு திருத்த முடியாத கட்டத்தை எட்டிவிடும் என்றும் எச்சரித்திருந்தார்.

ஐக்கிய நாடுகள் சபைச் செயலாளர் இருபது ஆண்டுகளுக்கு முன்பு விடுத்த எச்சரிக்கையையும் நாம் கவனத்தில் கொள்ளவில்லை. பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஜப்பானிய ஞானி மசனாபு புகாகோ விடுத்த எச்சரிக்கை பற்றியும் நாம் அக்கறை கொள்ளவில்லை. ஆனால் இந்த ரெண்டு பேரும் குறிப்பிட்ட அச்சுறுத்தல் உண்மைதான் என்பதை இன்று நடைபெறும் இயற்கைப் பேரழிவுகள் உறுதிப்படுத்துகின்றன. பூமி வெப்பமாவது குறித்து உலகத்தில் பலரும் எச்சரித்த வண்ணம்

உள்ளார்கள். அதனுடைய விளைவே தட்பவெப்பநிலையில் ஏற்படும் மாற்றங்கள் என்பது குறித்து இன்றும் பரவலாகப் பேசப்படுகிறது. வனங்களும், நதிகளும், கால்நடைகளும், பயிரினங்களும், கடலும், கடல் வாழ் உயிரினங்களும் வாழ்வுக்கான இயற்கை ஆதாரங்கள். இவற்றை சிதைக்கின்ற எந்த செயலும் 'முன்னேற்றம்' ஆகமுடியாது என்று இந்திய சுற்றுச்சூழல் மேதை சுந்தர்லால் பகுகுணா திரும்பத் திரும்ப எச்சரித்துள்ளார். ஆனால் இவற்றை சிதைப்பதையே வளர்ச்சி என்றும், உற்பத்திப் பெருக்கம் என்றும் அரசாங்கம் புள்ளிவிவரங்களை அள்ளி வீசிறது. ஆலைப்பெருக்கம், வாகனப் பெருக்கம், ரசாயன வேளாண்மை, காடுகள் மறைவு இவையே பூமியை வெப்பமாக்கும் காரணிகளில் முதலிடத்தைப் பிடித்துக்கொள்பவை!

அமெரிக்க நாட்டவர் காட்டுகின்ற பாதையே வளர்ச்சிப்பாதை என்று கவ்விப் பிடித்தவர்கள் இன்று வறுமைக்குள் தள்ளப்படுவதை நாம் காணுகிறோம். அமெரிக்கர்கள் கூட நாம் செய்கின்ற செயல்கள் ஏழைநாடுகளை மட்டுமே பாதிக்கும் என்று கருதிக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது அவர்களது செயல் அமெரிக்காவையும் தொடர்ந்து பாதிப்பதை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அடுத்தடுத்து வந்த புயல்கள், அணையாது எரிகின்ற காடுகள் பொருளாதாரத்தில் ஏற்பட்ட சரிவு அனைத்தும் இயற்கையைப் பாழ்படுத்துவது தேச எல்லைகளைக் கடந்து கேடுகள் விளைவிக்கும் என்பதை உணரத் தலைப்பட்டு விட்டார்கள்.

பூமி வெப்பமாவதற்கு அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளின் செயல்பாடுகள் 75 விழுக்காடு காரணமாக அமைகின்றன. ஆனால் பாதிக்கப்படுவது ஏழை நாடுகளாக இருக்கின்றன. ஏழை நாடுகளில் உள்ள பணம் படைத்தவர்களின் செயல்பாடுகள் இயற்கைப் பேரழிவிற்குக் காரணமாக இருக்கின்றன, ஆனால் பாதிக்கப்பட்டவர்கள் ஏழை எளிய மக்களாக இருக்கின்றார்கள். இவர்கள் எண்ணிக்கையில்

பெரும்பான்மையினராகவும் இருக்கின்றார்கள். தட்பவெப்பநிலை மாறுவதாலும் புயல், பூகம்பம் எனப் பேரழிவுகள் நேர்வதாலும் ஏற்படும் பாதிப்புகளைக் குறைப்பதற்கு மக்களுடைய வறுமையை ஒழிப்பதே முழு முதல் வழிமுறையாக அமைய முடியும். அதற்கு அவர்களது வாழ்வாதாரங்களைச் சிதைக்காமலும், மனித உரிமைகளைப் பறிக்காமல் இருப்பதும் அடிப்படைத் தேவையாக அமைகிறது. பட்டணத்தில் குடியேறிய மூன்றில் ஒருவருக்கு உணவளிக்க வேண்டிய பொறுப்பும், இந்த மூன்றில் இரண்டு பேராகிய கிராமத்தவர் தோளிலேயே சுமத்தப்படுகிறது. நிலங்கள் வேளாண்மை சாராத பயன்பாடுகளுக்கு மாற்றப்படுவதும், உழைக்கும் மக்கள் பயிர்த் தொழிலிலிருந்து அப்புறப்படுத்தப்படுவதும் பெரிய அளவில் உணவுப் பற்றாக்குறையைத் தோற்றுவிக்கும் அபாயம் உள்ளது.

மேலே விவரிக்கப்பட்டுள்ள சூழல்கள் நமக்கு உணர்த்துவது என்ன? நம்முடைய தலைவிதியைத் தீர்மானிப்பது யாரோ ஒரு சிலர். அதற்காக நாம் என்ன செய்ய முடியும் என்ற அசட்டை மனோபாவத்தோடு சுருண்டு படுத்துக்கொள்ளாமல் சமுதாயத்தில் ஒரு புதிய சிந்தனை அலையை எழுப்புவதற்கு நாம் ஒவ்வொருவரும் ஒரு கல்லை எடுத்துப்போட முடியும் என்ற நம்பிக்கையை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். வருங்கால சமுதாயத்தின் வாழ்வுக்காக, வாழக்கூடிய ஒரு பூமியை விட்டுச் செல்வதற்கு நாம் என்ன செய்ய முடியும் என்ற ஒரு கேள்வியை எழுப்பி விடை காணுவதற்கு நமக்குக் கடமையிருக்கிறது.

…………………….

## உலகம் ஒரு கர்ம பூமி!

உலக அளவில் மக்களை ஒரு மாபெரும் உணவு நெருக்கடி சுற்றி வளைக்கிறது. ஐக்கிய நாடுகள் சபை அவசரக் கூட்டத்தில் இது பேசப்பட்டிருக்கிறது. உணவுப் பொருள் விலை ஏற்றம் ஒருபுறம் மக்களை வறுமைக்குள்

தள்ளுகிறது. மறுபுறம் சத்துணவு பற்றாக்குறைக்கு இட்டுச் செல்கிறது. மக்களுக்குச் சத்தான உணவு கொடுப்பது என்பது பசியைப் போக்குவது என்பதை விடவும் சிக்கலானது.

இந்தியாவில் அண்மையில் எடுக்கப்பட்ட ஆய்வின்படி, பெண்கள் மற்றும் குழந்தைகளில் 51% முதல் 74% (57 கோடியே 17 லட்சம் முதல் 82 கோடியே 88 லட்சம்) மக்கள் ரத்த சோகையால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். மூன்று வயதிற்குட்பட்ட குழந்தைகள் 47% எடை குறைவாலும், வளர்ச்சி குன்றியதாலும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களது உணவில் புரதம் பற்றாக்குறையாக உள்ளது என்று அந்த ஆய்வு சொல்கிறது.

அரிசியை மட்டுமே மானிய விலையில் கொடுப்பதால் பசியை ஒழிக்க முடியும். ஆனால் சத்துணவுப் பற்றாக்குறையை ஒழிக்க முடியாது. கிராமப்புறத்தில் இயற்கை ஆதாரங்களை மேம்படுத்தாத காரணத்தால் மக்கள் நகரங்களை நோக்கி நகர்கிறார்கள். கிராமப்புறங்களில் வேலை வாய்ப்பும், வருவாயும் குறைகிறது. ஆதலால், கிராமப்புற மக்கள் சத்துணவுப் பற்றாக்குறைக்கு உள்ளாகிறார்கள். அரசாங்கத்தின் வளர்ச்சித் திட்டம் அனைத்தும் மக்களை நிலத்தை விட்டு வெளியேற்றுவதாக இருக்கிறது.

பிரதம மந்திரி மன்மோகன்சிங் அவர்கள், 'உழவர்கள் நிலக்கை விட்டு வெளியேறினால் அவர்களது வறுமையைப் போக்கி விடுவோம் " என்று சொல்லியிருக்கிறார். ஆனால் இதுவரையில் நிலத்தை விட்டு வெளியேறியவர்களுக்கு வறுமைதான் அதிகரித்திருக்கிறது. பிரதம மந்திரி கொடுத்த இன்னொரு தகவல்படி 37% இந்தியர்கள் வறுமைக்கோட்டிற்கு கீழே உள்ளார்கள். அதாவது 41 கோடியே 44 லட்சம் மக்கள் வறுமைக்கோட்டிற்குக் கீழே புழுவாக நெளிகிறார்கள். நோய் எதிர்ப்புத்தன்மை இல்லாததால் பல நோய்களுக்கு ஆளாகிறார்கள்.

இந்தியா சுதந்திரம் வாங்கும் போது இருந்த மக்கள்தொகை 30 கோடி, அன்றிருந்த மக்களை விட 12 கோடி கூடுதலான மக்கள் இன்று வறுமைக் கோட்டிற்கு கீழே உள்ளார்கள். அதாவது பசியோடு படுக்கைக்குச் செல்கிறார்கள். நிறைவேற்றப்படும் வளர்ச்சித் திட்டம் அனைத்தும் மக்களின் வாழ்வாதாரங்களை நாசப்படுத்துவதாக உள்ளது. இருப்பவருக்கும், இல்லாதவருக்கும் உள்ள இடைவெளி நீண்டு கொண்டே செல்கிறது. உலகத்தின் பெரும் பணக்காரர்களில் 37 பேர் இந்தியாவில் உள்ளார்கள். ஆனால் சராசரி இந்தியன் வருவாய் ஒரு நாளைக்கு இருபது ரூபாயாக உள்ளது என்று ஐ.நா. அறிக்கை கூறுகிறது. உலகத்தில் உள்ளவர்கள் அனைவரும் விளையாடுவதற்காக இந்தியா வந்துள்ளார்கள்.

அந்த விளையாட்டுத் திடலை உருவாக்குவதில் பள்ளி செல்ல வேண்டிய பருவத்துப் பிஞ்சுகள் கல் சுமந்தார்கள். சாந்துச் சட்டி சுமந்தார்கள் என்று கூறி ஒரு எழுத்தாளர் நெருப்பை உமிழ்கிறார். அவர் கோபத்திற்கு அர்த்தம் இருக்கிறது. ஒரு தேசத்தில் தலைநகரத்திலேயே பள்ளி செல்ல வேண்டியவர்கள் பாரம் சுமக்கிறார்கள் என்ற நிலை நீடிப்பது நாம் அனைவரும் வெட்கப்பட வேண்டிய ஒன்று.

கல்வி கற்றால் வாழ்க்கையில் முன்னேறலாம் என்ற தவறான நம்பிக்கை மக்கள் மத்தியில் பரப்பப்படுகிறது. இதன் விளைவாக படித்த இளைஞர்கள் வேலையில்லா திண்டாட்டத்தில் தள்ளப்படு கிறார்கள், கான்பூர் ஐ.ஐ.டி. தலைவர் எம். அனந்தகிருஷ்ணன் கீழ்க்கண்ட தகவல்களைத் தருகிறார்.

தமிழ்நாட்டில் 50க்கும் மேற்பட்ட பொறியில் கல்லூரிகள் உள்ளன. இங்கு ஆண்டு தோறும் 1 இலட்சத்து 93 ஆயிரம் மாணவர்கள் சேர்க்கப்படுகிறார்கள். ஆனால் 30 ஆயிரம் பேர் மட்டுமே வேலைக்கு அமருகிறார்கள். ஆதலால் தமிழ்நாட்டுப் பொறியியல் கல்லூரிகள் மட்டுமே ஆண்டுதோறும் 1 லட்சத்து 50 ஆயிரம் வேலையற்றோரை உருவாக்குகிறது. கல்வி என்பது மக்கள் வாழ்க்கையோடு

ஒன்றியதாக இருந்தாலொழிய மக்களின் சிக்கல்களுக்கு தீர்வு தரமுடியாது. கிராமபுறத்தின்

இளைஞர்களை கிராம வாழ்க்கை சாராத தொழில்கள் கற்க வைப்பதால் வேலையில்லா பட்டாளம் அதிகரித்தவண்ணம் உள்ளது. திருப்பரில் வேலையில்லாத் திண்டாட்டம் காரணமாக சென்ற

மட்டுமே 900 பேர் தற்கொலை செய்து கொண்டார்கள் என்று அந்த விவரம் கூறுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம், வேளாண்மையில் ஏற்படும் நெருக்கடிகள் விலைவாசி ஏற்றம், அதனால் மக்களுக்குச் சத்துணவுப் பற்றாக்குறை இப்படிப் பிரச்சனைகள் சங்கிலித் தொடர்போல ஆவதற்கு காரணம் மக்களுடைய பிரச்சனைகளை அரசாங்கம் தீர்த்து வைக்க முயற்சிப்பதால்தான். மக்களிடம் நிலத்தைக் கொடுத்து நிலத்தில் வீடுகளை கட்டிக் கொடுத்து நீர் வசதியும் செய்து கொடுத்தால் அவர்கள் அரசாங்கத்திற்குச் சுமையாக இருக்கமாட்டார்கள். மேற்கு நாடுகளுக்கும் நமக்கும் உள்ள இடைவெளி மிகப்பெரியது. எடுத்துக்காட்டாக அமெரிக்காவின் மொத்த மக்கள் தொகை 30 கோடிக்கும் குறைவு. ஆனால் இந்தியாவின் மக்கள் தொகை 112 கோடி, அமெரிக்காவில் 1.5% விழுக்காடு மக்கள் கிராமப்புறங்களில் வாழ்கிறார்கள். ஒவ்வொரு உழவரும் 5,000 ஏக்கரோ அல்லது அதற்கு மேலாகவோ நிலம் வைத்திருக்கிறார். அவர் நிலத்தை விட்டு ஓடிவிடாமல் இருப்பதற்காக அமெரிக்க அரசாங்கம் நிறைய மானியம் கொடுக்கிறது.

எடுத்துக்காட்டாக ஒவ்வொரு பசு மாட்டிற்கும் 2 டாலர் அன்றாடம் மானியமாகச் செல்கிறது. அதாவது ஒரு பசு ஒரு ஆண்டில் சம்பாதிக்கின்ற பணத்தைக் கொண்டு விமானத்தில் உலகை ஒரு வளையம் வரமுடியும். இத்தகைய ஒரு வேளாண்மை இந்திய மண்ணுக்கு ஒத்துவரக்கூடுமா? இந்தியாவில் 70% மக்கள் கிராமத்தில் வாழுகிறார்கள். அதில் 50% மக்கள் பயிர்த்தொழிலைச் சார்ந்து இருக்கிறார்கள்.

நிலத்தை உழுது பயிர் செய்யும் உழவர்களில் 80% மக்கள் 2.5 முதல் 5 ஏக்கர் அளவே நிலம் வைத்திருக்கிறார்கள். ஆதலால் அமெரிக்கர் களுடைய ஒட்டு விதைகள், எந்திரங்கள், இரசாயனங்கள், நஞ்சுகள் இந்திய விவசாயத்திற்குப் பொருந்தி வரமுடியாது. அது சாத்தியமும் இல்லை. இது பற்றிய புரிதல் இல்லாமையால் அமெரிக்க தொழில்நுட்பத்தை வேளாண்மையில் புகுத்தி வேளாண்மைக்கு இருந்த மரியாதையை இழந்திருக்கிறோம். ஆதலால் இளைஞர்கள்

வேளாண்மை பக்கம் திரும்பிப் பார்ப்பதில்லை. உழவர்களாக இருப்பவர்களே பயிர்த்தொழிலைத் துறந்துவிட்டு வேறு தொழில் செய்யலாமா என்ற யோசனையில் உள்ளார்கள்.

பணக்கார உழவர்கள் உணவு உற்பத்தியை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். இவர்கள் சந்தையில் விற்று பணம் பார்ப்பதற்காகவே சந்தைக்குத் தேவையானதை உற்பத்தி செய்வதற்குப் பணத்தை முதலீடு செய்கிறார்கள். இவர்கள் பயன்படுத்துகின்ற நிலம், நீர், மின்சாரம் அரசு நிதி உதவி, வங்கிக்கடன் அனைத்தும் உணவு அல்லாத பண்டமான பூ, புகையிலை, கரும்பு, மரம் இப்படிப்பட்ட உற்பத்தி நோக்கி திருப்ப விடப்படுகிறது.

அரசு, கோதுமை, இரண்டை மட்டுமே கொள்முதல் செய்து பொதுவிநியோக கடைகளில் இந்த இரண்டு தானியங்களை மட்டுமே விற்பனை செய்யப்படுகிறது. இதனால், சத்து மிகுந்த தானியங்கள் என்று பெயர் பெற்ற சோளம், கம்பு, வரகு, கேழ்வரகு, குதிரைவாலி, திணை, சாமை காடைக்கன்னி போன்ற பயிரினங்கள் மறைந்து வருகின்றன இவைகளை உற்பத்தி செய்வதற்கு நிறைய தண்ணீரோ, தண்ணீரை மேல் எடுப்பதற்கு நிறைய மின்சாரமோ தேவைப்படுவதில்லை.

இத்தகைய சிக்கன நடவடிக்கை குறித்தும் நாம் சிந்திப்பது காலத்தின் கட்டாயம். மக்கள் வாழ்க்கையை மையமாகக் கொண்ட திட்டமிடல் இந்தியாவில் இல்லை . இதன்

காரணமாகவே ஒரு சர்வதேச தொழிலாளர் நிறுவனம் கொடுத்த அறிக்கையில் உள்ளது போல இந்திய நகரத்து சேரிகளில் மக்கள் குவிகிறார்கள். இன்று 9 கோடியே 30 லட்சம் மக்கள் பட்டணச் சேரிகளில் வசிக்கிறார்கள். தமிழ்நாட்டில் உள்ள பட்டணச்சேரிகளில் 86 லட்சம் மக்கள் புழுவாக நெளிகிறார்கள் இளைஞர்கள் ஒரு மாபெரும் சக்தி, ஆனால் அவர்கள் வேலையில்லாத படையாக உருவெடுப்பது சமுதாயத்திற்கு பெரும் தீங்கு என்று ஐ.நா சபை பொதுச்செயலாளர் கூறுகிறார்.

இந்த உலகம் ஒரு கர்ம பூமி. அதாவது செயல் இல்லாமல் இந்த உலகம் கிடையாது. வெற்றியடையும் ஒவ்வொருவரும் கர்மயோகியா இருந்தாக வேண்டும்.

……………………..

## இன்றைய தேவை!

பூமி வெப்பமாவதும், பருவகால நிலைமையில் மாற்றம் நிகழ்வதும் அதனால் பயிர்த்தொழில் பாதிக்கப்படுவதும், அதன் விளைவாக உணவுப் பற்றாக்குறை ஏற்படுவதும் இன்று உலகம் முழுவதும் பேசப்படும் விவாதப் பொருள் ஆகியுள்ளது.

முதல் முதலாகப் பூமி வெப்பமடைவது குறித்து சுவீடன் விஞ்ஞானி, 1989 ஆம் ஆண்டு எச்சரித்தார். அவர், 'நிலக்கரி மற்றும் அது போன்ற பொருள்களை எரிப்பதால் கரிஅமிலக் காற்று வெளியாகிறது. இப்படி கரிக்காற்று வெளியேறுவதால் பூமி வெப்பம் அதிகரிக்கிறது' என்று குறிப்பிட்டார்.

57 ஆண்டுகளுக்குப் பின்பு 1955-ஆம் ஆண்டு அமெரிக்க விஞ்ஞானி சார்லஸ் கீலிஸ், காற்று வெளியில்

கரியமிலக் காற்று லட்சம் பாகத்தில் 32 பங்கு இருப்பதை வெளியிட்டு அதனால் பூமி வெப்பம் கூடுவதை உணர்த்தினார்.

ஆனாலும் அதிகாரத்தில் இருந்தவர்களின் பொறுப்பற்ற செயல்களால் அண்டவெளி புகை மண்டலமாவதும், அதனால் பூமி வெப்பமாவதும் பருவகால நிலைமையில் விரும்பத்தகாத மாற்றம் நிகழ்வதும் உயர்ந்த வண்ணம் உள்ளது.

மனிதரின் தவறான குறுக்கீடுகளால் ஏற்படும் மாற்றங்கள் எப்படிப்பட்டவை?

ஒரு டிகிரி செல்சியஸ் வெப்பம் கூடும்போது வறட்சி நீடிக்கும். அமெரிக்காவின் மேற்கில் சில பகுதிகள் மணல் பாலையாக மாறும். 1930-ஆம் வருட வெப்ப நிலையைக் காட்டிலும் இரண்டு டிகிரி வெப்பம் கூடுமானால், சிறிய குன்றுகளும், உறைபனிப் பாறைகள் மறைந்து போகும். உறைபனியின் கெட்டித்தன்மை நீர்த்துவிடும். சிறு நீரோட்டங்கள் மறையும். கடலின் அமிலத் தன்மையில் மாற்றம் ஏற்படுவதால் நுண்ணுயிர்களும், நீர்த் தாவரங்களும், ஒட்டுண்ணிகளும் மறையும்.

இதன் தாக்கமாகத் திரும்பப் பெறமுடியாத மாற்றம் நிகழும். கிரின்லாந்து கண்டத்தில் பனிப்பாறைகள் உருகும். கடல்மட்டம் சுமார் 7 மீட்டர்கள் வரை உயரும். அநேக இடங்களில் ஆண்டு தோறும் அனல் காற்று வீசுவது அதிகரிக்கும். உலகிலுள்ள உயிரினங்களில் மூன்றில் ஒரு பங்கு அழிந்துவிடும். ஆசிய ஆப்பிரிக்கக் கண்ட நாடுகளில் பசியும், பட்டினிச் சாவும் அதிகரிக்கும்.

3 டிகிரி செல்சியஸ் புவி வெப்பம் உயருமானால், வட அமெரிக்காவின் நடுப்பகுதி பாலையாக மாறும். கடும் புயல் வீசும், பொருளாதார நாசம் பெருமளவில் இருக்கும். வெள்ளப்பெருக்கும், வறட்சியும் பெருமளவில் ஏற்படும். பயிர்களில் பூச்சித் தாக்குதல் அதிகரிக்கும். ஒருவேளை 50 விழுக்காடு உயிரினங்கள் நிரந்தரமாக மடிந்து போகலாம்.

இந்தப் பேரழிவின் தொடக்க கால நிகழ்வுகளைப் பூமி இன்று சந்தித்துக் கொண்டிருக்கிறது. அமெரிக்காவில்

தீப்பற்றி எரிவதும், சோவியத் ருஷ்யாவில் வறட்சி ஏற்பட்டு உணவுப்பற்றாக்குறை ஏற்பட்டதும், சீன நாட்டில் ஏற்பட்ட நிலநடுக்கம் குழந்தைகள் உயிரைப் பலிவாங்கியதும், பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள வரலாறு காணாத வெள்ளச் சேதமும், இதனைப் புரிய வைக்கும் இமயமலை நடுவில் அமைந்துள்ள பனிப்பொழிவு மிகுந்த குளிர்ப்பாலையான 'லே' பகுதியில் வானம் இடி இடித்து மழை கொட்டியதால் வீடுகள் இடிந்து விழுந்து பலர் பலியாகியுள்ளனர்.

அசாம், மணிப்பூர், பீகார், மேற்கு வங்கம், ஆந்திரம், கர்நாடகம் என்று எங்கெங்கும் பெருகுகிற வெள்ளத்தால் மக்கள் உயிர்களுக்கும், உடமைகளுக்கும் பேரிழப்பு நேர்ந்துள்ளது.

ஆண்டுதோறும் தஞ்சை, திருவாரூர், நாகை மாவட்டத்தில் குள்ளரக நெற்பயிர் அறுவடைக்கு சில நாட்கள் மட்டுமே மிஞ்சியுள்ள நிலையில் வெள்ள நீரில் மூழ்கி அழிவதைப் பார்க்கிறோம். மார்ச் மாத கோடையில் நாகை மாவட்டத்தில் பெய்த தொடர் மழையால் பாசிய பயிறும், உளுந்தும் மூழ்கி வீணாகிப்போனதைப் பார்த்தோம் 20ஆம் ஆண்டு ஆழிப்பேரலையைச் சந்தித்தோம். 2009-ஆம் ஆண்டு நீலகிரி மலையில் பேரளவு மலைச் சரிவு இருந்தது. சமீபத்திய ஆய்வுகள், கடந்த காலங்களில் தட்பவெப்ப நிலை மாற்றத்தால் ஏற்பட்ட சேதம் 17 கோடி அமெரிக்க டாலர்கள் என்று மதிப்பிட்டுள்ளள.

உலகின் வல்லரசு நாடான அமெரிக்கா, 25 விழுக்காடு கரி அமிலக் காற்றை உமிழ்கிறது. பொது உடைமை நாடான சீனாவும், ருஷ்யாவும் அடுத்த மட்டத்தில் உள்ளன. நான்காவது இடத்தில் இந்தியா உள்ளது.

எரி பொருள்களைப் பயன்படுத்தும் எந்த ஒரு நாடும் இக்குற்றத்தில் இருந்து தப்பமுடியாது.

இரசாயன உரங்கள், பூச்சிக்கொல்லிகள், களைக்கொல்லிகள், ஒட்டு (வீரிய) சொத்தை விதைகள், எந்திரங்கள் பயன்படுத்தப்படும் நவீன வேளாண்மை

ஆகியவை 35 விழுக்காடு புவி வெப்பத்திற்கு அடிப்படையாகிறது. அதனாலேயே பயிர்த்தொழில் பாதிக்கப்படவும் செய்கிறது. சொல்லப்போனால், மனித சமுதாயம் தீவிரமான தற்கொலை முயற்சியில் இறங்கியுள்ளது. கவுதம புத்தர் கண்டுணர்ந்து சொன்ன 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்ற கருத்து இன்றைக்கும் யதார்த்தமான உண்மையாகப் பளிச்சிடுகிறது.

அடிப்படைத் தேவைகளோடு நிறைவடையும் மனப்போக்கை வளர்த்துக்கொள்ள வேண்டியது இன்றைய தேவை. (ஆதாரம் : ஆசியா பசுபிக் தகவல் வலைப்பணி வெளியீடு)

"வேண்டின்உண் டாகத் துறக்க: துறந்தபின்

ஈண்டு இயற் பால பல" - குறள் 312.

……………

வழுக்கை மண்டைக் கழுகின் வாழ்வுக் காலம் 50 ஆண்டுகள். அது 40 வயதை அடைந்ததும், அதன் அலகும் நகங்களும் வளைய ஆரம்பிக்கின்றன. அவற்றைக் கொண்டு அது இரையைப் பிடிக்க முடியாது. அதன் உடலில் மிகையான இறகுகளைத் தன் வளைந்த நகங்களைக் கொண்டு பிய்த்துப் போட முடியாது. எனவே, அதன் எடை அதிகரிக்கிறது. பறப்பதே கூட அதற்கு மிகவும் வலியிளைத் தருமளவுக்குக் கடினமாகி விடுகிறது. கம்பீரமாயிருந்த கழுகு காலப் போக்கில் ஆதரவில்லாமலும், பலவீனமாகவும் ஆகிவிடுகிறது. அதன் பிறகுதான் நம்ப முடியாத நிகழ்ச்சியொன்று நடைபெறுகிறது. அக்கழுகு தன் அலகு உடையும் வரை பாறைகளின் மீது மோதிக்கொள்ளும். பிறகு அது ஏகாந்தத்திற்குள் நுழைந்துவிடும். மூன்று மாதங்கள் இரையெடுக்காமலும் எங்கும் பறக்காமலும் இருக்கும். பிறகு அதற்கு ஒரு புதிய கூர்மையான அலகு வளரும். அதைக் கொண்டு தன் மிகை இறகுகளை அது பிய்த்து எறிந்துவிடும். தன் நகங்களைக் குறைத்துக் கூராக்கிக் கொள்ளும். பின்னர் அது விண்ணில் மீண்டும் பறந்து

பழைய கம்பீரத்துடன் வாழ்வின் புதிய கட்டத்தினைத் தொடங்கும்.